நாடக

# வெளி



நாடக இதழ் 15 ஜன-பிப். 1993

## வெளி

இந்த இதழ் கொஞ்சம் தாமதமாக வெளிவருகிறது. எதிர்பாராத காரணங்களால் இரண்டு இதழ்கள் பின்தங்கிப் போக வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. அதனால் அடுத்த இரண்டு இதழ்களும் ஒரு மாத இடைவெளியிலேயே வந்துவிடும்.

இந்த இதழில் அண்மையில் காலமான மலையாள நாடகாசிரியர் தோப்பில் பாஸியின் பேட்டி பிரசுரமாகிறது. தோப்பில் பாஸியின் பல கருத்துகள் விவாதத்துக்குரியவையானாலும் அவை ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தையும் சிந்தனையையும் பிரதிபலிப்பதால் கவனத்துக்குரியவையாகின்றன.

நாடகக் கருத்தரங்களும், நாடக விழாக்களும் தமிழ்நாட்டில் பரவலாக நடைபெறுவது வரவேற்கப்படவேண்டிய விஷயம். பேராசிரியர் ராமானுஜத்தின் முயற்சிகளுக்குப் பிறகு தற்போது சிறுவர் நாடகம் மீண்டும் கவனம் பெறத் துவங்கியிருப்பது மகிழ்ச்சிக்குரியது. சிறுவர் நாடக ஆக்கத்தில் வேலுசரவணனின் ஆர்வமும் முயற்சிகளும் பாராட்டப்பட வேண்டியவை.

---

தொடர்புக்கு ; 1415, 2வது தெரு, முதல் செக்டார், கே.கே. நகர் சென்னை- 78

வெளியிடுபவர் : தேன்மொழி. கௌரவ ஆசிரியர் : ரெங்கராஜன்.

தனிஇதழ் : ரூ 8/: ஆண்டு நன்கொடை : ரூ 45/= அச்சு : வைகை அச்சகம் சென்னை-94.

---

## பொருளடக்கம்



அட்டையில் : வேலுசரவணனின் 'கடல்பூதம்' சிறுவர் நாடகக் காட்சி.

# இந்தோ ஜெர்மானிய நாடகக் கருத்தரங்கு

—ரவீந்திரன்

சென்னை மாக்ஸ் முல்லர் பவனில் சென்ற மார்ச் 19-23 இந்தோ ஜெர்மானிய நாடகக் கருத்தரங்கம் நடைபெற்றது. சுமார் 5 நாட்களில் 11 அமர்வுகளில் இந்த கருத்தரங்கம் நடைபெற்றது. இந்தியாவின் முக்கிய நாடகப் பிரமுகர்கள் இன்றைய நாடகப் போக்குகளின் பல்வேறு அம்சங்களைப் பற்றி இந்த ஐந்து நாட்களில் கலந்துரையாடியும், விவாதித்தும் அலசினர். நவ ஜெர்மன் நாடகத்தின் சார்பாக பார்பரா முண்டல் (Barbara Mundel) கலந்து கொண்டார். முதல் நாள் அமர்வில் பார்பரா வீடியோவின் உதவி கொண்டு பொதுவான சில ஜெர்மன் நாடகப் போக்குகளை விளக்கினார். இது நமக்கு அந்நியமான ஒன்று என்ற காரணத்தினாலோ என்னவோ இந்த அமர்வு வினாக்களை எழுப்ப வில்லை. இது முடிந்து கேரளத்தைச் சார்ந்த காவாலம் நாராயண பணிக்கர் குழுவினரின் நாடகம் நடந்தது.

இரண்டாம் நாள் முதல் அமர்வின் மீது மீண்டும் பார்பரா ஜெர்மன் நாடகம் பற்றிய தன்னுடைய தனிப்பட்ட அனுபவத்தைப் பற்றிப் பேசினார். இதுவும் வீடியோவின் உதவி கொண்டு நடத்தப்பட்டது. இந்த அமர்வில் பரிட்சார்த்த நாடகங்களுக்கு ஜெர்மனியிலும் பெரிய வரவேற்பு இல்லை என்ற கருத்து வெளிப்பட்டது. இந்த அமர்வில் கேட்கப்பட்ட மற்றொரு முக்கியமான கேள்வி- இன்றைய ஜெர்மன் நாடகம் எப்படி இருக்கிறது. இதற்கு பார்பரா அளித்த பதில் - It's dead.

இதையடுத்து காவாலம் நாராயண பணிக்கர் பேசினார். தன்னுடைய கலையைப் பற்றியும், அது உருவாகும் முறை, மற்றும் தன்னுடைய கண்டுபிடிப்புகள், உத்திகள் பற்றியும் பேசினார். இதற்கு அவர் தன்னுடைய குழுவினரையே பயன்படுத்தி பல உத்திகளை எப்படி அவர் பாரம்பரியக் கலைகளினூடே கண்டுபிடித்தார் என்பதை விளக்கினார் உதாரணமாக களரியின் ஒரு அசைவை எடுத்துக் கொண்டு எப்படி அதை யானையைக் குறிப்பதற்காக மாற்ற முடியும் என்று விளக்கினார். மற்றும் 'கர்ண பாரதம்' என்ற சமஸ்கிருத நாடகத்தின் மூலமும் தன்னுடைய உத்திகள் சிலவற்றை விளக்கினார். அவர் கூறிய முக்கிய மான கருத்துகளில் ஒன்று - நான் கதகளியிலிருந்தோ, மோகினியாட்டத்தி லிருந்தோ அல்லது களரியிலிருந்தோ எந்த ஒரு முத்திரையையும் அப்படியே எடுத்துக் கொள்வதில்லை. அந்த அசைவுகளை அடிப்படையாகக் கொண்டு நானே எனக்குத் தக்கபடி புதியதொரு அசைவை ஏற்படுத்துகிறேன் - என்று அவர் கூறியது. இதையடுத்து அவருடைய குழுவினரின் 'தெய்யா தெய்யம்' நாடகம் நடித்துக் காட்டப்பட்டது.

மூன்றாம் நாள் முதல் அமர்வில் மராத்திய நாடகாசிரியர் மகேஷ் எல்குன்ச்வர் நவீன இந்திய நாடகங்களில் பிரதியின் முக்கியத்துவம்பற்றி பேசினார். நாடகம் பற்றிய தன்னுடைய பார்வை, அணுகுமுறை ஆகியவற்றையும் விளக்கினார். அவருடைய பல கருத்துக்கள் மிகுந்த விவாதத்துக்குள்ளாயின. நாடகத்தை ஏன் எழுதுகிறீர்கள் என்ற கேள்விக்கு அவருடைய பதில் தெளிவானதாக இல்லை. தான் முதலில் a-political ஆக இருந்ததாகவும், ஆனால் அது இயலாத காரியம் என்றும் ஒருவன் சிகரெட் வாங்கும்போதுகூட he is being political என்ற அவரது விளக்கம் திருப்தியளிக்கவில்லை. மேலும் அவர் கிராமத்தைப் பற்றியும், நகரத்தைப் பற்றியும் கூறிய பல கருத்துகள் ஒருவித romantic தனத்துடன் இருந்தன. இதன்பின் இவருடைய நாடகம் ஒன்று 'Madras Players' இனால் (ஆங்கிலத்தில்) படித்துக் காட்டப்பட்டது. அதை அங்கிருந்த சிலரால் எப்படி ரசிக்க முடிந்தது என்பது விந்தையே.

அடுத்த அமர்வில் கூத்துப் பட்டறை ந. முத்துசாமி தன்னுடைய எழுத்தைப் பற்றியும், தன் குழுவினருடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களைப் பற்றியும் பேசினார். இவருடைய பேச்சின் முக்கிய கருத்து தான் வார்த்தைகளற்ற நாடக அரங்கை நோக்கிச் செல்வதாக அவர் கூறியது. முத்துசாமியின் ஈடுபாடு பற்றி எந்த சந்தேகமும் இல்லை என்ற போதும் இவரோ, இவரது குழுவோ எதற்காக ஒன்றைச் செய்கிறார்கள் என்ற கேள்விக்குச் சரியான பதில் கிடைக்கவில்லை என்றுதான் சொல்லவேண்டும். சமூகத்தில் அடிப்படை விஷயங்களைப் பற்றிய புரிதல் இல்லை அப்படி இருப்பினும் அதைப் பற்றி ஒன்றும் செய்வதற்கில்லை என்கிற மாதிரியாகத்தான் இவருடைய கருத்துக்கள் இருந்தன. ஆனால் இவருடைய wordless theatre conceptம், இவருடைய குழுவினரின் தமிழ் உச்சரிப்பும் (diction) சம்பந்தமில்லாமல் இருப்பது பெரிய முரண்பாடு.

அன்றைய மூன்றாம் அமர்வில் மாக்ஸ் முல்லர் பவன் ஜெர்மன் விரிவுரையாளர் ஜி. கிருஷ்ணமூர்த்தி தமிழ் மொழியாக்கத்தைப் பற்றிப் பேசினார் ஜி. கிருஷ்ண மூர்த்தியின் நாடகமொழிபற்றி பல கேள்விகள் எழுந்தன. இந்த அமர்வும் மிகுந்த விவாதத்துக்குள்ளானது. இவர் கூறிய முக்கியமான கருத்தொன்று மூல நாடகாசிரியரின் கருத்தை தமிழில் தரவேண்டும் என்பது. அதாவது ஒரு பிரதி பன்முக வாசிப்புக்கு உட்படாது என்பதாகும். இது ஏற்றுக்கொள்ள முடியாதது. Author intent என்று நிச்சயமாக ஒன்று உள்ளது என்ற போதும் அது இதுதான் என்று எவராலும் உறுதியாகக் கூற முடியாது. அந்த நாடகத்தைப் பார்ப்போரின், படிப்போரின் மொழிபெயர்ப்போரின் தனிப்பட்ட அனுபவங்களி னூடே, ஆளுமையினூடேதான் author intent என்பது வெளிப்படும். மேடையேற்றப்படும் நாடகம் எப்படி இயங்க வேண்டும் என்று கூற மொழி பெயர்ப்பாளருக்கு உரிமை உண்டு என்று இவர் கூறியதும் கேள்விக்குரியது.

இந்த அமர்வில் சொல்லப்பட்ட பல பேருடைய கருத்துகள் தனிப்பட்ட முறையில் உள்ள கருத்து வேறுபாடுகளையும், விருப்பு வெறுப்புகளையும் அடிப்படையாகக் கொண்டுதான் நடந்தன என்பது வருந்தத்தக்க விஷயம்- இதையடுத்து ஜெர்மனி லிருந்து தமிழில் மொழிபெயர்ப்பான நாடகங்களிலிருந்து சில பகுதிகள் கூத்துப் பட்டறை, பல்கலை அரங்கம், ஆடுகளம் ஆகிய குழுக்களால் நிகழ்த்திக் காட்டப் பட்டன.

நான்காம் நாள் முதல் அமர்வில் பார்பரா முண்டல் ஜெர்மனியின் இணை நாடக அரங்கைப் (parallel theatre) பற்றிப் பேசினார். அவரது நாடகங்கள் உட்பட சில நாடகங்களை வீடியோவில் காட்டினார். இதில் அவர் காண்பித்த பல நாடகங்களைப் பார்த்த போது இத்துறையில் அவர்கள் எங்கோ இருக்கிறார்கள் என்பது உறுதியானது. அன்று பார்பரா சொன்ன மற்றொரு சுவையான கருத்து இத்துறைக்கு அரசு தரும் மானியம் பற்றியதுதான். இங்கும் செயல்படுத்த வேண்டிய ஒன்றாகும் இது.

இதையடுத்து கர்நாடகா சமுதாய இயக்கத்தைச் சேர்ந்த பிரசன்னா தெரு நாடகம் (street thea're) பற்றிப் பேசினார். அத்தனை அமர்வுகளிலும் கருத்தாழம் கொண்டது இதுதான் எனலாம். மேலும் உருப்படியான கருத்துப் பரிமாற்றமும் இந்த அமர்வில்தான் நடந்தது. சமுதாயா குழு ஆரம்பிக்கப்பட்ட விதம், தங்கள் கருத்தை விளக்கித் தங்களுக்குத் தேவையான பணத்தை அவர்கள் மக்களிடமிருந்தே பெற்ற முறை பிறகு அக்குழுவுக்கு ஏற்பட்ட அடையாளக் குழப்பங்கள் (identify crisis) ஆகியவை எல்லாரும் மனதில் கொள்ள வேண்டியவை. இந்த அமர்வில் வெளிப்பட்ட முக்கியமான கருத்து இன்றைய சமுதாயத்தைப் பற்றி, அரசியலைப் பற்றி பிரசன்னா அவர்களுக்கு இருந்த புரிதலும், அக்கறையும்தான்.

ஐந்தாம் நாள் இரண்டு அமர்வுகளும் பெண்ணுரிமை நாடக அரங்கைப் பற்றியது முதல் அமர்வில் பார்பரா முண்டலும், இரண்டாம் அமர்வில் டெல்லி தேசிய நாடகப் பள்ளியைச் சேர்ந்த அனுராதா கபூரும் பேசினார்கள். இரண்டு அமர்வுகளும் பெண்ணுரிமை இயக்கத்தைப் பற்றியோ, அந்த நாடக அரங்கைப் பற்றியோ எந்த ஒரு விவாதத்தையும் எழுப்பாதது ஏமாற்றத்தைத் தந்தது. அனுராதா கபூர் தான் இதைக் கையாண்ட விதம் மற்றும் தான் பார்த்த இயக்கிய நாடகங்களிலிருந்து சில காட்சிகளை விளக்கி அவை எப்படி பெண்ணுரிமைக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்தது என்று விளக்கினார். இதையடுத்து ஐந்து நாள் கருத்தரங்கம்பற்றி திருமதி யமுனா பிரபு, மாக்ஸ் முல்லர் பவன் இயக்குனர் திரு. ஷிண்ட்லர், தமிழ்ப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு. ராமானுஜம் ஆகியோர் பேசினர்.

சங்கீத நாடக அகாடமியோ, மற்ற அரசு நிறுவனங்களோ நடத்த வேண்டிய இத்தகைய ஒரு கருத்தரங்கைத் தனியாக மாக்ஸ் முல்லர் பவன் செய்தது பாராட்டத்தக்கது. மற்ற மொழி நாடகங்களின் நிலையை எட்ட தமிழ்நாடகம் என்ன செய்ய வேண்டும், நாடக ஆசிரியருக்கு மேடையேற்றப்படும் விதத்தில் மாற்றம் செய்ய உரிமை உள்ளதா ஆகியவை இக்கருத்தரங்கம் எழுப்பிய முக்கிய கேள்விகள். வழக்கம்போல் நாடகக் குழுக்கள் தங்கள் பரஸ்பர விருப்பு வெறுப்புகளை வெளிப்படுத்தும் இடமாகவும் இது அமைந்தது ★

---

## அகாலத்தில் வந்தவர்கள்

—அழகியசிங்கர்

காட்சி 1

(இரவு பத்து மணி. ராமசாமி புத்தகம் படித்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு வயது 40. தீவிரமாக—அடிக்கடி புகை ஊதிக் கொண்டு, புத்தகப் பக்கங்களைப் புரட்டிக்கொண்டு வரும்போது அதை ரசித்துப் படித்த மனோபாவம் முகத்தில் தெளிவாகத் தெரிகிறது. சில சமயம் படிப்பதை நிறுத்திவிட்டு, அப்புத்தகத்தில் ஓடும் வரிகளை நினைத்துக் கொண்டு சிந்திக்கவும் செய்கிறார். அப்போது அவரை அறியாமலேயே சந்தோஷமும் சிரிப்பும் அவர் முகத்தில். நேரம் போய்க் கொண்டிருக்கிறது. இரவு பத்து, பதினொன்று என்று. ராமசாமி கலைந்த தலையுடன் கிட்டத்தட்ட அவரைச் சுற்றிலும் சிகரெட் புகையின் துகள்களுடன் காட்சி தருகிறார்.)

''ராமசாமி...!ராமசாமி!'' என்று கதவுக்குப் பின்னால் யாரோ கூப்பிடும் சப்தம் ஒலிக்கிறது. (ராமசாமிக்குத் திகைப்பாக இருக்கிறது. இந்த நேரத்தில் யார் தன்னைக் கூப்பிடுவார்களென்று, அவர் எழுந்து போகாமல் புத்தகம் படிப்பதை நிறுத்திவிட்டு யோசனையில் ஆழ்கிறார்.)

''டேய் ராமசாமீ...!நான்தான்டா... கதவைத் திற''

(அதிகாரமிடுகிற இந்தக் குரல் ராமசாமியின் காதிற்குள் கிணற்றிலிருந்து கேட்பது போலிருக்கிறது. குரலை எங்கோ கேட்டுப் பழக்கப்பட்டதுபோல தோன்றுகிறது.)

''டேய் ராமசாமீ...!என்னடா நான் கூப்பிடறது காதுல விழலை... என்னை மறந்துட்டியா?...''

(ராமசாமி இப்போது பதட்டம் அடை கிறார் அவர் கையிலிருந்த புத்தகம் நழுவி கீழே விழுகிறது. அவர் அமர்ந்திருந்த நாற்காலியைத் தள்ளி விடுகிறார். பரபரப்பில் டேபிளிலிருந்து பொருள்கள் நிலைகுலைந்து போகின்றன. பேனா கீழே விழுந்துவிடுகிறது. நிதானமாக எழுந்து நிற்கிறார் 'பதட்டம் அடையாதே!' என்று மனத்திற்குள் சொல்லிக் கொள்கிறார். குரல் நிச்சயமாக அம்மானுஷ்யமாகத்தான் ஒலித்தது. யாரும் வாசலிலிருந்து கூப்பிடவில்லை. காலிங் பெல்லை அழுத்த வில்லை யாரும் நிற்பதாகக்கூடத் தெரியவில்லை.)

''ராமசாமீ!''

ராமசாமி (பதட்டத்துடன்): யார்—யார்?

(அவசர அவசரமாக வாசல் பக்கம் போகிறார். கதவைத் திறந்து வெளியில் பார்க்கிறார். யாரும் இல்லை. திரும்பவும் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே திரும்புகிறார். சிறிது சத்தமாக 'பயப்படாதே!' என்று முனுமுனுக்கிறார். தன் இடத்தில் வந்து அமர்கிறார்.)

(திரும்பவும் குரல்)

''நீ ஏன் பயப்படணும், ராமசாமீ!''

'ராமசாமி வெலவெலத்துப் போய் விடுகிறார்.! அவர் புத்தகம் படித்த இடத்தில்—அவர் உட்கார்ந்த நாற்காலியின் எதிரில் யாரோ அமர்ந் திருப்பதுபோல் படுகிறது. தூய வெள்ளை நிறச் சட்டையும், வேஷ்டியும்அணிந்திருக்கிறார் அமர்ந்திருந்தவர்.)

ராமசாமி: (பதட்டத்துடன்) நீங்க எப்படி இங்கே வந்தீங்க. நீங்க...யாரு?

உட்கார்ந்திருப்பவர்: (ஏளனமாக) என்ன ராமசாமீ! என்னை மறந்துட்டியா?

ராமசாமி: (பதட்டம் குறையாமல்) எனக்கு முதல்ல ஒண்ணு தெரியணும். நீங்க எப்படி இங்கே வந்தீங்க?

உட்கார்ந்திருப்பவர்: நான் எப்படி வந்தா என்ன...? நீ என்னை மறந்துட்டே, இல்லையா?

ராமசாமி: எனக்கு குழப்பமாகவும் இருக்கு. உங்களைப் பாத்தா பயமாகவும் இருக்கு.

உட்கார்ந்திருப்பவர்: பயப்படாதே...இங்கே வந்து உட்காரு...எனக்குக்கூட உன்னைப் பார்த்தா நம்ப முடியலை...நீ ராமசாமிதானான்னு.

ராமசாமி: நான் ராமசாமின்னு உங்களுக்கு எப்படித் தெரியும்?

உட்கார்ந்திருப்பவர்: சரியாப்போச்சு...எனக்குத் தெரியாம வேற யாருக்குத் தெரியும்ங்கிறே.. உனக்குக் கல்யாணம் ஆயிடுத்தா... உன் மனைவி குழந்தைங்க எல்லாம் எங்கே...!

ராமசாமி: அவ குழந்தைகளோட ஊருக்குப் போயிருக்காள். நீங்க எப்படி இங்க வந்தீங்க...?நான் கதவைகூடத் திறக்கும்போது நீங்க இல்லையே?

உட்கார்ந்திருப்பவர்: நான் இங்கதான் உட்கார்ந்திருந்தேன். உன் கண்ணுக்குப்படலை...நீ என்ன புஸ்தகம் படிக்கிறே...?

ராமசாமி: At the now of death.

உட்கார்ந்திருப்பவர்: நீ இப்படி கண்ட புத்தகங்களைப் படிக்கிறதை நிறுத்தலையா?

ராமசாமி: (கோபத்துடன்) உங்களுக்கு எப்படித் தெரியும், நான் கண்ட புஸ்தகங்களைப் படிக்கிறேனென்னு... என் அப்பா மாதிரி பேசறீங்களே...! உங்களை யாரு இங்கே உட்காரச் சொன்னா... என் அனுமதி இல்லாம எப்படி வந்தீங்க...! எழுந்து போங்க...?

உட்கார்ந்திருப்பவர்: ராமசாமீ...? நிஜமாச் சொல்லு உனக்கு என்னை அடையாளம் தெரியலை.

ராமசாமி: (திகைப்புடன்) உங்களை எங்கேயோ பார்த்த மாதிரியும் தெரியுது. உங்கள் குரலை எப்பவோ கேட்ட மாதிரியும் படறது.

உட்கார்ந்திருப்பவர்: நான்தான்டா உன் அப்பா.

ராமசாமி: (அதிர்ச்சியுடன்) அப்பாவா!... (சிறிது பயத்துடன்) என் அப்பா செத்துப்போய் இருபது வருஷம் ஆயிடுத்து .. முந்தா நாள்கூட அவர் திவசம் வந்து முடிந்தது காக்கா சாதத்தைச் சாப்பிடறதான்னு பார்த்துட்டுத்தான் நான் சாப்பிடவே உட்கார்ந்தேன்...நீங்க .. எப்படி... இங்க வரமுடியும்...?

உட்கார்ந்திருப்பவர்: 20 வருஷங்களுக்கு முன்னாடி எதிர்பாராத விதமாய் ஹார்ட் அட்டாக் வந்து செத்துப் போயிட்டேனே! நீங்க யாரும் எதிர் பார்த்திருக்க மாட்டீங்க... ஏன் நானே எதிர்ப்பார்க்கலை. அன்னிக்கு எனக்குப் புடிச்ச கொத்தவரங்காய் கறி உன் அம்மா பண்ணியிருந்தாள். நான் ருசித்துக்கூட சாப்பிட்டேன்.

ராமசாமி: (சிறிது யோசனையுடன்) அப்படியா!...எனக்கு உங்கள் முகம் மறந்து போச்சு. எப்படி நம்பறது? செத்துப் போனவர் எப்படி வரமுடியும்?

உட்கார்ந்திருப்பவர்: ராமசாமீ... !நீ நம்பாட்டி போ...நான் செத்துப் போறப்போ நீ சின்னபையன். படிச்சுண்டு இருந்தே...எப்போதும் புஸ்தகத்தை வெச்சுண்டு உட்கார்ந்திடுவே...!

ராமசாமி: (குழப்பத்துடன்) அப்பா ஒருத்தர் இருந்தார்ங்கிறது எனக்கு ஞாபகத்துல இல்லை... 20 வயதுல அவர் செத்துப்போனது ஞாபகத்தில இருக்கு-ஆனா அவர் எப்படிப் பேசுவார், எப்படி நடப்பார் என்றெல்லாம் ஞாபகத்தில் இல்லை. இன்னும் கேட்டா நீங்கதான் அப்பாங்கிறதை நீங்க சொன்னாலும என்னால நம்ப முடியலை.

உட்கார்ந்திருப்பவர்: நம்பாட்டி போ... இந்த இடத்திலதான் நான் (அவர் ஒரு இடத்தைக் காட்டுகிறார்) செத்துப்போனேன். இங்க ஒரு ஊஞ்சல் இருந்தது. எடுத்துட்டே போலிருக்கு. நான் சாப்பிட்டு இப்படித்தான் உட்கார்ந்தேன்...(பாவனையில் செய்து காட்டுகிறார்)...மார்பில பயங்கர மான வலி...என்னால கத்தக்கூட முடியவில்லை. திடீரென்னு என் உடல் கனக்கத் தொடங்குகிறது. பிறகு என் கண் முன்னால பஞ்சு பொதியாகி நான் மிதப்பதுபோல ஆகிவிட்டேன். அப்புறம் நானும் என் உடம்பும் வேறு வேறு.. நான் என் உடம்பைப் பாக்கிறேன்... உன் அம்மாவிற்கு ரொம்ப நேரமாத் தெரியலை...நான் அவளைக் கூப்பிடறேன். அவளுக்குக் காதுல விழலை... பிறகு எதற்கோ என்னை வந்து பார்க்கிறாள். நான அசையாம இருக்கறதைப் பார்த்துட்டு பயப்படறாள்... அவள் போட்ட கூச்சலை நீ கேட்டிருக்கணும்... அந்தச் சமயத்தில் நீதான் இல்லையே?...காலேஜ்ஜிக்குப் போயிருந்தே?

ராமசாமி: (நடுக்கத்துடன்) நீங்கள் சொல்றதெல்லாம் வாஸ்துவம். நான் இப்ப அப்பாங்கிற ஆவியோடப் பேசறேனா...?

உட்கார்ந்திருப்பவர்: நீ ஏன் பயப்படறே? செத்துப் போனவன் வந்துட் டானான்னு பயப்படறியா? உனக்கு இப்ப என்ன வயசு?

ராமசாமி: நாப்பது முடியப் போறது.

உட்கார்ந்திருப்பவர்: நாப்பதா. நம்ப முடியலை... 20 வயசுல உன்னைப் பாத்தது. நீ எஸ்.எஸ்.எல்.சி. படிக்கும்போது உனக்கு கணக்கே வராது. உனக்கு ஒண்ணு தெரியுமா? நீ என்னை மாதிரிதான் இருக்கே... என்னையே நான் பார்த்துகிற மாதிரிதான் படறது.

ராமசாமி: (படப்படப்பு குறையாமல்) அப்படியா... என்னை மாதிரியா நீங்க இருந்தீங்க. உங்கள் முகம் எனக்கு ஞாபகம் இல்லையே?... என்னு டைய அப்பா அதோ பாருங்க போட்டோ அதுலதான் இருக்காங்க...

ஆனா இப்ப உங்களைப் பார்க்கும்போது அந்தப் போட்டோவில இருக்கிற மாதிரி படலை...முந்தாநாள் அவருக்குத் திவசம் முடிஞ்சது.

உட்கார்ந்திருப்பவர்: பாவம் உன்னை நினைச்சா கஷ்டமா இருக்கு. உன் அப்பாவை நீ ஞாபகம் வெச்சுக்க முடியலை. உண்மையில அதுக்கான காரணம் வேற. உன் வாழ்க்கை முழுவதும் உனக்குப் பரபரப்பு அதிகமாகி விட்டது. நீ எப்படி ஞாபகத்துல வெச்சுப்பே?

ராமசாமி: எனக்கு நல்லா ஞாபகத்துக்கு வர்றது... அந்தச் சம்பவம் அப்பா செத்துப்போன விஷயத்தை காலேஜ்ஜில என்கிட்டே யாரோ சொல்றாங்க... நான் அலறி அடித்துக்கொண்டு வர்றேன். எல்லோரும் கும்பலாக உட்கார்ந்து அழறாங்க—'எப்படி ஆச்சு இவருக்கு?' என்று சத்தம் போடறேன். அவருக்கு 'ஹார்ட் அட்டாக்' வந்து போயிட்டாருன்னு யாரோ சொல்றாங்க. நான் பெரிசா வாய்விட்டு அழறேன். அப்ப நான் மனசுக்குள்ளே ஒண்ணே ஒண்ணுதான் நினைச்சுண்டேன். நான் பெரிய டாக்டரா வரணுங்கிறதுதான். ஒரு டாக்டரா மாறி எல்லோருக்கும் ஹார்ட் அட்டாக் வராம காப்பாத்தணுங்கறதுதான்... என் வெறி... ஏன்? ஏழைங்ககளுக்கு வைத்தியம் இலவசமாப் பாக்கணும்கூட நான் நினைச்சேன்.எனக்குத் தெரியும் நான் டாக்டரா வர முடியாதுன்னு, அத நினைச்சு இப்ப எனக்கு சிரிப்புத்தான் வரும்.

உட்கார்ந்திருப்பவர்: (சிரித்தபடி) நீ சாதாரணமாத்தான் படிப்பே... நீ எப்படி டாக்டரா வந்திருக்க முடியும்?

ராமசாமி: நான் அப்படி நினைச்சாலும் உடனேயே எனக்கு அது முடியாதுங்கறதும் புரிஞ்சது... கிரிக்கெட் விளையாடும்போதுகூட நான் ஒரு பெரிய கிரிக்கெட் பிளேயரா வரணும்னு நினைப்பேன். இதல்லாம் உணர்ச்சி வேகத்துல அப்ப அப்ப நினைக்கறதுதான்.

உட்கார்ந்திருப்பவர்: நீ அடிக்கடி இப்படி உணர்ச்சி வசப்படுவே.

ராமசாமி: இப்பல்லாம் அப்படி இல்லே.

உட்கார்ந்திருப்பவர்: உனக்கு வயசாயிடுத்து. அப்படியெல்லாம் இருக்க முடியாது. உன்னைப் பாத்தா என்னை மாதிரி நீ மாறி வர்றாப்போல தெரியுது.

ராமசாமி: (திகைப்புடன்) நீங்கள்தானா என் அப்பா?

உட்கார்ந்திருப்பவர்: இதுல என்ன சந்தேகம்?

ராமசாமி: (படபடப்புடன்) எதுக்கு இப்ப வந்து என்னை சங்கடப்படுத்துறீங்க

உட்கார்ந்திருப்பவர்: உன்னைப் பார்க்கணும்னு வந்தேன், தப்பா?

ராமசாமி : செத்துப் போனவங்களோடு நான் எப்படிப் பேசிக் கொண்டிருக்க முடியும்? இது நடக்கக் கூடாது.

உட்கார்ந்திருப்பவர் : ஏன் அப்படி நடந்தாதான் என்ன?

ராமசாமி : நீ வாழ்ந்தாச்சு... போயாச்சு. இன்னும் எதற்கு தொந்தரவு தரணும்.

உட்கார்ந்திருப்பவர் : அடப் பாவீ! நான் செத்துப் போனபோது நீ எப்படி அழுதே?

ராமசாமி : அப்ப நடந்த நிகழ்ச்சி அது. அம்மாகூட உன் பிரிவின் துயர் தாங்காம மாடியிலே பல மணி நேரம பல நாட்கள் அழுதிருப்பாள்.

உட்கார்ந்திருப்பவர் : எனக்குத் தெரியும் விசாலத்தைப் பற்றி.

ராமசாமி : (உணர்ச்சி மேலிட்டவாறு) நீங்க சரியா அம்மா பேரைச் சொல்றீங்க. என்னை வேற சரியா அடையாளம் காட்டறீங்க. இந்த இடத்துல என்னைப் பயமுறுத்த வந்திருக்கிற மாதிரித் தெரியுது.

(பேசிக்கொண்டிருந்த ராமசாமி மயக்கம் போட்டு விழுந்துவிடுகிறார். மேடையில் விளக்குகள் அணைகின்றன.)

## காட்சி 2

(மெதுவாக மேடையில் வெளிச்சம் பரவுகிறது. மேடையின் ஒரு பக்கத்தில் ராமசாமி மயக்கத்தில் கிடக்கிறார். இப்போது மேடையில் வயதான முதாட்டியின் உருவம் தெரிகிறது.)

விசாலம் : நீங்களா?

உட்கார்ந்திருப்பவர் : விசாலமா?

விசாலம் : ஆமாம்.

உட்கார்ந்திருப்பவர் : என்னை ஞாபகத்துலே வெச்சுண்டிருக்கியே! உன் பிள்ளைக்குத்தான் என்னைத் தெரியலை.

விசாலம் : எனக்கு எப்படி மறக்கும்?

உட்கார்ந்திருப்பவர் : ரொம்ப வயசானவள் மாதிரி இருக்கே?

விசாலம் : ஆமாம். நான் போன வருஷம்தான் செத்துப் போனேன். எனக்கு அப்ப வயசு 75 இருக்கும்.

உட்கார்ந்திருப்பவர் : அப்படியா? உனக்கு என்ன நோய் வந்தது?

விசாலம் : போனாப் போதுங்கற மாதிரி ஆயிடுத்து. உட்கார்ந்த இடத்தை விட்டு நகர முடியலை. மூத்திரம் மலமெல்லாம் ஒரே இடத்துல. ராமசாமி தான் என்னை நல்லா கவனிச்சுண்டாள். அவ—அதான் ராமசாமி மனைவி கல்யாணிக்கு என்னைப் பாத்தால அருவருப்பு வரும். அவ குழந்தை களும் என்கிட்டே வரலை.

உட்கார்ந்திருப்பவர் : நான் சாகும்போது என் சாவை எதிர்பார்க்கலை. இல்லையா?

விசாலம் : இல்லை. உங்களுக்கு என்ன நோயா? ஒண்ணுமில்லையே? திடீர்னு நீங்க செத்துப் போயிட்டீங்க. உங்களைப் பிரிஞ்ச துக்கம் என்னால தாங்க முடியல... மொட்டை யாடியிலே போய் அழுவேன்.

உட்கார்ந்திருப்பவர் : ராமசாமி எல்லாம் சொன்னான். அவன் என்னை மாதிரியே இருக்கான். நீ என்ற சொல்றே?

விசாலம் : அவன்கிட்டே நானும் இதை அடிக்கடி சொல்வேன். அவன் நம்ப மாட்டான். எனக்கு அப்பா முகம் ஞாபகத்துல இல்லேன்பான்.

உட்கார்ந்திருப்பவர் : எனக்கு அதுதான் அவன்மேல கோபம். இப்பகூட நான் சொல்றதை நம்பலை அவன்.

விசாலம் : நீங்க போய் 20 வருஷம் ஆகி இருக்கும். மறந்து போயிருப்பான்.

உட்கார்ந்திருப்பவர் : வாஸ்தவம்தான்.

விசாலம் : எனக்குக்கூட கொஞ்ச வருடங்கள் உங்களைப் பிரிஞ்ச துக்கம் தாங்க முடியலே. அப்புறம் இல்லை வேற கவலை வந்துடுத்து ராமசாமி ஒரே பையன்கிறதினால அவனை வளர்க்கிறது பெரிய விஷயமாப்படலை. நீங்கள் போதுமட்டும் பணம் சேர்த்து வெச்சுட்டுத்தான் போயிருந்தீங்க.

உட்கார்ந்திருப்பவர் : வாழ்க்கையிலே எது எப்படி நடக்கும்னு சொல்ல முடியாது.

விசாலம் : உங்களுக்குப் பணம் சேர்க்கிறதுதான் ஞாபகம். அனாவசியமாக செலவு செய்ய மாட்டீங்க. ராமசாமிக்கு புஸ்தகம் அவன் அதிகமாக சேமிக்காம வீணடிப்பான்.

உட்கார்ந்திருப்பவர் : நீ பார்க்க ரொம்ப அழகா இருப்பே. இப்ப கோரமா இருக்கே?

விசாலம் : நான் கிழவியாய்ப் போய் படுத்த படுக்கையாய் நோயில் விழுந்து போனேன். நீங்கள் சாகும்போது உங்களுக்கு வயசு குறைச்சல்.

உட்கார்ந்திருப்பவர் : ஆமாம்.

விசாலம் : ராமசாமி ஏன் இப்படி படுத்திருக்கான்? அவன் குழந்தைங்க, கல்யாணியெல்லாம் எங்கே காணோம்? வீடு ஏன் இப்படி வெறுமையாய் இருக்கு?

உட்கார்ந்திருப்பவர் : என்கிட்டே பேசிக்கிட்டே இருந்தான். என்னைப் பார்த்த அதிர்ச்சியிலே மயக்கம் ஆயிட்டான். அது சரி, அவன் மனைவி பெயர் கல்யாணியா? பார்க்க நல்லா இருப்பாளா?

விசாலம் : ராமாயணத்தில வர்ற சீதை மாதிரி இருப்பா.

உட்கார்ந்திருப்பவர் : (சிரித்தபடி) அவனை எழுப்பேன்.

விசாலம் : ராமசாமீ! ராமசாமீ!

(ராமசாமி அசையாமல் படுத்து இருக்கிறார்.)

உட்கார்ந்திருப்பவர் : அவன் மூர்ச்சை அடைந்திருப்பான். அவன் முகத்தில தண்ணீ வேணுமானா அடியேன்.

(மேடையில் வெளிச்சம் குறைகிறது. திரும்பவும் வெளிச்சம் பரவுகிறது. ராமசாமி, விசாலம், ராமசாமியின் அப்பா ஆகியோர் ஒருவரை ஒருவர் பார்த்தபடி அமர்ந்திருக்கிறார்கள்.)

## காட்சி 3

ராமசாமி : (ஆச்சரியத்துடன்) அம்மா! நீயா?

விசாலம் : ஆமாம். நான்தான்.

ராமசாமி : என்னால நம்ப முடியலை. எப்படி செத்துப் போனவங்களோடு நான் பேசிண்டுருக்கேன் என்பதை.

உட்கார்ந்திருப்பவர் : விசாலம், நீ சொல்லு. நான்தான் அவன் அப்பாங்கிறதை.

விசாலம் : ஆமாம் ராமசாமி! இவர்தான் உன் அப்பா.

ராமசாமி : எனக்கு அப்பவே தெரிஞ்சு போச்சு. அந்த அதிர்ச்சித் தாங்காமத் தான் மயக்கமாகி விழுந்துவிட்டேன்.

விசாலம் : இதுல அதிர்ச்சி அடைய என்ன இருக்கு?

ராமசாமி : செத்துப் போனவங்களோடு நான் பேசறது கலவரத்தை உண்டாக்குகிறது.

உட்கார்ந்திருப்பவர் : இதுவாவது பரவாயில்லை. நான் இன்னும் உன் தாத்தா வரலையேன்னு கவலைப்படறேன்.

ராமசாமி : அவர் வேற வரணுமா?

உட்கார்ந்திருப்பவர் : இந்த உலகமே மாறிவிட்ட மாதிரி தெரியறது. நான் பாத்த மாதிரி எதுவும் இல்லை.

விசாலம் : நான் போன பிறகுகூட இந்த உலகம் மாறிப் போனதாத்தான் தெரியறது.

ராமசாமி : அப்பா, நீ போய் 20 வருஷம் மேல ஆயிடுத்து. உலகம் தலைகீழாய் மாறிப் போய்த்தான் இருக்கும்

உட்கார்ந்திருப்பவர் : என்னை நீ அப்பான்னு கூப்பிடறது சந்தோஷமாய் இருக்கு. உன்னைப் பாக்கும்போது என்னைப் பாக்கிற மாதிரிதான் தெரியறது. நான் போய் எத்தனை வருஷம் ஆச்சுன்னு தெரியலை. என்னா இறப்புங்கிறது காலத்தைத் தாண்டிய ஒண்ணு. எனக்கு எந்தக் காலமும் இல்லை.

ராமசாமி : எங்களையெல்லாம் பார்க்கும்போது உனக்கு ஆச்சரியமா இருக்குமே?

ராமசாமி அப்பா: ஆமாம். உன் அம்மாவைப் பார்க்கும்போது, ஆச்சரியமாத் தான் இருக்கு.

ராமசாமி: ஏன்?

அப்பா: உன் அம்மாவை நான் இந்தத் தோற்றத்துல பார்க்கலை.

விசாலம்: நீங்கள் போய் நான் எவ்வளவு வருஷம் இருந்தேன். தோற்றம் மாறித்தான் போச்சு.

ராமசாமி: எனக்கு அம்மா முகம் மட்டும் ஞாபகத்தில இருக்கு. உங்கள் முகம் ஞாபகத்திற்கு வரலை. ஆனால் எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு. பழகிய மனிதராகக்கூட படறது

அப்பா: இந்தக் காலத்துல வர்றவங்க அப்படித்தான் இருக்காங்க.

ராமசாமி: ஆனா அம்மா எப்படி இவ்வளவு ஆரோக்கியமா என் முன்னால தெரியறான்னு தெரியலை. அவ சாகும்போது மோசமா இருந்தாள்... செத்தா போதும்ர்னுகூட தோணிச்சு. அவள் இருந்த ரூமுக்கு வரக்கூட முடியலை. எனக்குச் சில சமயம் ஆத்திரம் வரும்.

விசாலம்: ஆமாம். ராமசாமி, உனக்கு நான் ரொம்ப தொந்தரவு கொடுத் துட்டேன் நான் போனாப் போதும்னுகூட அப்ப எனக்குத் தோணிச்சு.

ராமசாமி: நீ உயிரோடு இருக்கிறப்போ இவ்வளவு தெளிவாக்கூட பேசலை. எதாவது உளறுவே?

விசாலம்: நான் எத்தனை மாசமா படுத்துக் கிடந்தேன். டாக்டர் சொன்னாரே! இன்னும் சில மாதங்கள்தான்னு. உன்கிட்டேகூட சொன்னாரே, 'ஏதோ இருக்கிறவரைக்கும் இருக்கட்டும்'னு உனக்கு ஞாபகமிருக்கா?

ராமசாமி: ஆமாம். அதைக் கேட்டவுடன், எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. அப்புறம் பழகிப் போயிடுத்து நீ அவஸ்தைப் படறதைப் பார்க்கிறப்போ 'நீ போய்ச் சேர்ந்தா மேல்னு தோணிச்சு'.

விசாலம்: நீ கூட நான் பழகிய இடத்துல என்னைப் படுக்க வைக்கலை. என்னைத் தனியா அந்த ரூம்லதான் படுக்க வச்ச. ஏன் எனக்கு இந்தப் பீரோ பக்கத்துல டிவி பார்த்துதான் தூங்கி பழக்கம்.

ராமசாமி: (கரகரத்த குரலில்) என்னை மன்னிச்சுடும்மா... நான் வேணும்னு அப்படிச் செய்யலை... நீ மோசமா இருந்தே... உன் பக்கத்துலயே யாரும் வர முடியாது. வேற வழி இல்லை. அதனாலே உன்னை அங்கே போடும்படி ஆயிடுத்து.

விசாலம்: நீ இதுக்கெல்லாம் வருத்தப்படாதே. நீ செஞ்சது சரிதான்.

ராமசாமி: நான்கூட கல்யாணிகிட்டே சொல்வேன் நாம யாருக்கும் இது மாதிரி ஆனாக்கூட தனியா அந்த ரூமுக்குத்தான் போகணும்னு.

அப்பா: நீ சொல்றதைப் பாத்தா அம்மா ரொம்ப கஷ்டப்பட்டுத்தான் போனாப்பல இருக்கு.

ராமசாமி: ஆமாம்.

விசாலம்: எனக்கு ஒரு வியாதியும் இல்லை. ஆனால் டிபி உண்டு. வயசு ஆயிட்டதினால தொடர்ந்து வாழறது சாத்தியமில்லாமல் போயிடுத்து. ஒரு கட்டத்துல போய்ச் சேர்ந்தா போதும்னு தோணிச்சு.

ராமசாமி: அம்மா சில சமயம் நல்லா பேசுவாள். சில சமயம் பேசமாட்டாள். எனக்குக் கல்யாணம் ஆனதிலிருந்து அம்மா சமையல் செய்யறதை நிறுத்திட்டாள்.

அப்பா: உன் அம்மா சமையல் நல்லா இருக்கும்.

விசாலம்: வயசாயிடுத்துன்னா உடல் தானாகவே ஓய்ஞ்சு போயிடறது.

ராமசாமி: 40 வயசுக்குப் பிறகு வியாதி இல்லாம எந்த மனுஷனும் இருக்க முடியாது.

(வாசலில் திரும்பவும் கதவைத் தட்டும் சத்தம். ராமசாமி எழுந்துபோய் கதவைத் திறக்கலாமாவென்று யோசிக்கிறார்.)

அப்பா: நீ போய் திறக்க வேண்டாம். நான் போய் திறக்கிறேன். வந்திருப்பவர் யாருன்னு எனக்குத் தெரியும்.

ராமசாமி: (பதட்டத்துடன்) யாரு?

அப்பா: நீயே பாக்கத்தான் போறே. அவசரப்படாதே.

(சிறிது நேரத்தில் அப்பா கதவைத் திறந்து இன்னொரு வயதானவரை அழைத்து வருகிறார்.)

அப்பா: வாங்க... இங்க உட்காருங்க.

(வந்தவர் அப்பா சொல்லுமிடத்தில் அமர்ந்து கொள்கிறார். விசாலம் மரியாதையாக எழுந்து வந்தவரைப் பார்த்து இரு கரங்களையும் கூப்பி நமஸ்கரிக்கிறாள்.)

அப்பா: ராமசாமி! இவர்தான் உன் தாத்தா. அவர் காலில விழுந்து நமஸ்காரம் செய்.

ராமசாமி: தாத்தாவா!

அப்பா: ஆமாம்.

ராமசாமி: நான் பிறக்கும்போது அவர் இல்லையே?

விசாலம்: நீ பிறக்கும்போது அவர் உயிரோடு இருந்தார். நீ சின்ன குழந்தை. ஒரு வயதுகூட ஆகலை - அவர் எதிர்பாராமல் போயிட்டார்.

ராமசாமி: அப்பாவையும் தாத்தான்னு சொல்ற இவரையும் பார்க்கும்போது ஒரே மாதிரியாகத்தான் தெரியறது.

தாத்தா: யாரு இவன்? உன் பிள்ளையா?

அப்பா: ஆமாம் அப்பா.

தாத்தா: என்னப்பா. எப்படி இருக்கே? ஒரு வயசுல உன்னைப் பாத்தது.

ராமசாமி: (படப்படப்புடன்) நான் எதுக்கு இறந்து போனவர்கள் சூழ இருக்கேன். கொஞ்ச நேரம் நீ வந்து அப்பான்னு சொன்னே. அம்மா போய் இரண்டு வருஷங்கூட முடியலை. இதோ அம்மா இருக்காள். எப்பவோ எனக்குத் தெரியாது போன தாத்தாவும் இதோ வந்துவிட்டார். எனக்கு ஒண்ணுமே புரியலை. செத்துப் போனவர்களெல்லாம் ஏன் வரணும்? நீங்களெல்லோரும் வாழ்ந்தாச்சு. இன்னும் ஏன் வாழ விரும்பணும்? என்னால இதை ஒத்துக்க முடியலை.

(ராமசாமி இதைச் சொல்லியபடியே திரும்பவும் மயங்கி விழுகிறார்.)

## காட்சி 4

தாத்தா சாம்பசிவம்: என்ன கிருஷ்ணமூர்த்தி எப்படி இருக்கே?

கிருஷ்ணமூர்த்தி (அப்பா): எனக்கு ராமசாமியைப் பார்த்ததிலிருந்து கோபம்.

சாம்பசிவம்: என்ன கோபம்?

கிருஷ்ணமூர்த்தி: பின்ன என்ன? எனக்கு உங்கள் முகம் ஞாபகத்திலிருக்கிறது. நீங்கள் எப்படிப் பேசுவீர்கள்? எப்படி நடந்து கொள்வீர்களென்பதெல்லாம் தெரியும். ஆனால் ராமசாமி என்னை புதிய மனிதனைப் பார்ப்பதுபோல பார்ககிறான்.

சாம்பசிவம்: நீ கோபப்படறதுல ஒரு அர்த்தமும் இல்லை. நீ காலத்தைப் புரிஞ்சுக்கணும். நாம வாழ்ந்த காலம் வேறு, இப்ப இருக்கிற காலம் வேறு.

கிருஷ்ணமூர்த்தி: ஆமாம். இப்ப இருக்கிறவங்க அவசரத்தில இருக்காங்க ரொப்ப சுயநலமா இருக்காங்க. அவங்களுக்கு நாமெல்லாம் தேவை இல்லை.

சாம்பசிவம்: விசாலம்! நான் இருக்கறதைப் பார்த்து இன்னும் பேசக்கூட வெட்கப்படுகிறாள்.

விசாலம்: ஏன் உங்கள் முன்னால் நிக்கறதுக்கு எனக்குப் பயம். பயம்னு சொல்றதைவிட மரியாதைன்னு சொல்லலாம்.

கிருஷ்ணமூர்த்தி: ஆமாம். நான் எந்தக் காரியத்தையுமே சுதந்திரமாச் செய்யலை. நீங்க சொல்றதை நான் அப்படியே எடுத்துப்பேன். ஒரு சமயம் எனக்கு கவர்ன்மன்டில நல்ல வேலை கிடைச்சது நீங்க போகக் கூடாதுன்னு சொல்லிட்டீங்க. நான் உங்களுக்கு ஒரே பையன். தனியா தள்ளாத வயசுல விட்டுட்டுப் போறது சரியில்லைன்னு எனக்குப் பட்டது. நான் உங்கள் பேச்சை மீறலை.

சாம்பசிவம்: உன்னைத் தடுத்தது பெரிய தவறுன்னு எனக்கும் புரிஞ்சது. நீ அந்த வேலையில இருந்திருந்தா இன்னும் வசதியாய் வாழ்ந்து இருக்கலாம்.

(ராமசாமி மெதுவாகக் கண்ணைத் திறந்து விழித்துப் பார்க்கிறார்.)

ராமசாமி: (அதிர்ச்சியுடன்) என்ன! இன்னும் நீங்க யாரும் போகலையா?

விசாலம்: (அதட்டலுடன்) ராமசாமி! நீ பேசறது நல்லாயில்லே? பெரியவங்க கிட்டே மரியாதையாக இருக்கணும்.

ராமசாமி: (கோபத்துடன்) உங்கள் எல்லோரையும் பார்த்ததில எனக்கு சந்தேகம் வந்துடுத்து. நான் உயிரோடு இருக்கிறேனா இல்லையான்னு.

கிருஷ்ணமூர்த்தி! ராமசாமி, இவர் உன் தாத்தா.

விசாலம்: தாத்தா முன்னால விழுந்து நமஸ்காரம் செய்.

(ராமசாமி வேறு வழியில்லாமல் நமஸ்கரிக்கிறார்.)

சாம்பசிவம்: கிருஷ்ணமூர்த்தி! ராமசாமியைப் பாத்தா உன்னைப்போல இருக்கான்.

ராமசாமி: ஆமா, எப்படித் தெரிஞ்சது, நான் இங்கே இருக்கேன்னு?

கிருஷ்ணமூர்த்தி: நீ எப்படி நினைக்கிறே...? நாங்கள் எங்கயோ போயிட்டோம்னு... உன்னுடன் நாங்களும் இருக்கிறோம்... நாங்கள் நிழல்... நீ நிஜம்... நீயும் நிழலாகும்போது நிஜத்தைப் புரிஞ்சுப்பே.

சாம்பசிவம்: ஏன் இந்த இடமெல்லாம் சின்னதா இப்படி இருக்கு.

ராமசாமி: இப்பெல்லாம் இப்படித்தான். அவனவன் இடம் கிடைக்கிறதுக்கே தவிக்கிறான்.

சாம்பசிவம்: எங்க வீடெல்லாம் வாசலிலிருந்து கொல்லைவரை இருக்கும்? வாசல்ல ஒரு தெருவும், கொல்லையில இன்னொரு தெருவும் போகும். அதெல்லாம் இப்ப இல்லை.

கிருஷ்ணமூர்த்தி: அதெல்லாம் அந்தக் காலத்துல.

ராமசாமி: இப்பெல்லாம் அறுபது வயசுக்கப்புறம் ஒரு மனிதன் வாழ்க்கையே தேவையில்லைன்னு தோணுது. பொருளாதார நெருக்கடி. வேலை இல்லாத கொடுமை. எல்லாச் சிக்கலும் உண்டு.

கிருஷ்ணமூர்த்தி: அப்ப 80 வயசுவரை ஒருத்தன் உயிரோடு இருந்தான்னா என்ன செய்வே? சுட்டுப் பொசுக்கிடுவியா?

ராமசாமி: அப்படி ஒரு கட்டாயம் வந்தாலும் வந்துடும். ஏன்னா வரவர சனங்க பெருக்கத்துக்கு வழியில்லாமல் போயிடுத்து.

கிருஷ்ணமூர்த்தி: அப்பா, நீயெல்லாம் எண்பது வயசுவரை ஆரோக்கியமாய் இருந்தே. இந்தக் காலத்துல அது சாத்தியமில்லை.

ராமசாமி: பட்டினியால நிறையாப் பேர் செத்துடுவாள் போலிருக்கு.

சாம்பசிவம்: விசாலம் கல்யாணத்தின்போது எவ்வளவு அழகாய் இருப்பாள்?

விசாலம்: (வெட்கத்துடன்) எனக்கு அம்மா வரலையேன்னு இருக்கு.

ராமசாமி: (எரிச்சலுடன்) பாட்டி வேற...வரணுமா?...போதும் போதும்... இனிமே யாரும் வேண்டாம். நான் எங்காவது ஓடிப் போயிடுவேன்.

கிருஷ்ணமூர்த்தி: ராமசாமி, யாரும் தனியா வரணும்னு இல்லை. எல்லோரும் உன் கூடத்தான் இருக்கோம். உன் பாட்டியும் இங்கதான் இருக்காள். நாங்கள் நிழல், நீ நிஜம். நிஜம் நிழலைப் புரிஞ்சுக்கணும்.

ராமசாமி: நிழல் நிழலாத்தான் இருக்கணும். நிஜமா மாற முயற்சி செய்யக் கூடாது.

சாம்பசிவம்: உன் பிரமை நாங்க தொந்தரவு செய்யறதா தோணுது.

விசாலம்: நானும் பொறுமையா நீ பேசறதெல்லாம் கேட்கறேன். என் பொறுமையும் எல்லை மீறிப் போயிரும்போல இருக்கு. பெரியவங்க வந்திருக்காங்கன்னு மரியாதையில்லாமப் பேசறே.

ராமசாமி: என் நிலமை உங்களுக்குப் புரியலை. நான் உயிரோடு இருக்கேன்.

கிருஷ்ணமூர்த்தி: அதனால என்ன? நீதானே திதி மூலம் எங்களைக் கூப்பிட்டே?

ராமசாமி: கூப்பிட்டேனா? திவசம்போது அது ஒரு சடங்கு.

சாம்பசிவம்: காக்கா சாப்பிட்ட பிறகுதானே சாப்பிட்டே, இல்லையா?

ராமசாமி: அதுவே எனக்குத் தெரியாது. ஆ'பீஸ் போற அவசரத்துல சிரார்த்தம் செய்ய வேண்டியிருக்கு. காக்கா சாப்பிடும்னுதான் நம்ப வேண்டியிருக்கு. எல்லோருக்கும் அவசரம். சாஸ்திரிகளுக்கு அவசரம். எனக்கும் அவசரம்.

சாம்பசிவம்: (ஆச்சரியத்துடன்) ஏன்?

ராமசாமி: ஆமாம். சாஸ்திரிக்கு அன்னிக்குத்தான் முதல் சிரார்த்தம். அதைத் தொடர்ந்து இன்னும் இரண்டு மூன்று சிரார்த்தங்கள். செய்ய ஓடிட்டார்.

சாம்பசிவம்: அடப் பாவீங்களா!

ராமசாமி: ஆமாம். சாஸ்திரிக்கு பணம் பண்ணணும். எங்களுக்குக் கர்மாவை முடிக்கணும்.

சாம்பசிவம்: என் காலத்துல சிரத்தையுடன் இந்தக் காரியத்தைச் செய்வோம். சிரார்த்தம் வர்றதுன்னு தெரிஞ்சால போதும், அம்மா ஒரு மாசமா அதைப் பத்தி கவலைப்படுவாள்.

கிருஷ்ணமூர்த்தி: ஏன் என் காலத்துல கூட நான் சிரத்தையாத்தான் செய்வேன்.

ராமசாமி: தெரியுமே. திவசம் நடக்கிற சமயத்தில நான் விஷமம் செய்வேன்னு, வாசல்ல அனுப்பி கதவைப் பூட்டிடுவீங்க. நீங்க கதவைத் திறந்து நான் சாப்பிட வர்றப்போ இரண்டு மணி ஆயிடும்.

கிருஷ்ணமூர்த்தி: அந்தச் சிரத்தையெல்லாம் வேணும் ராமசாமி. அன்னிக்குத் தான் நாம் செத்தவங்களையெல்லாம் நினைக்கிறோம்—

ராமசாமி: எனக்கு இந்தச் சடங்கெல்லாம் வீணுன்னு தோணுது.

சாம்பசிவம்: என் ஞாபகம் வெச்சுக்கவாவது இந்தச் சடங்கெல்லாம் வேணாமா?

ராமசாமி: வேணாம். எனக்கு ஆத்மா நாம் கவிதைதான் ஞாபகத்துல வர்றது. அதுல,

'நான் என்னோடு
உணவருந்திக்கொண்டு
அருகில் வேப்பமரக்கிளை
மீதிருந்த காகம் அழைத்தது
பித்ருக்களோ தேவர்களோ
என எண்ணி ஒரு சிறு கவளச் சாதத்தை
வெளியே வைத்தேன்
சாதம் சாதமாக
காகம் பறந்துவிட்டது
யாருடைய பித்ருக்களோ
நானறியேன்.'

இருந்தபோது ஒவ்வொருத்தரை ஞாபகம் வெச்சுண்டாச்சு. அம்மா சாகும் போது நான் அவளைச் சரியாக்கூட கவனிக்கலை. மாசக் கணக்கில படுத்த படுக்கையா இருந்தாள். அவள் பக்கமே போக முடியலை. டாக்டரைக் கூப்பிட்டு வந்தா செலவு...அம்மாவைப் பாத்துக்க தொடர்ந்து ஆளை வெச்சா செலவு...! போதும் போதும் - அம்மா போயிட்டாப் போதும்னு ஆயிடுத்து.

விசாலம்: (அழுதபடி) ராமசாமி என்னை நல்லாத்தான் கவனிச்சுண்டான். அவன் சக்திக்கும் மீறிப் போயிடுத்து நான், ஏன் இன்னும் இருக்கணும்னு அந்தச் சமயத்தில தோணும். அவன் குழந்தைகளும் அவனும் நல்லா இருக்கணும்.

ராமசாமி: (நெகிழ்ச்சியுடன்) நீ செத்தபிறகு நான் ரொம்ப நாளா தூக்கமில்லாம தவிச்சேன். என் மனசைக் குத்திச்சு. உன்னைச்சரியா கவனிக்காம போயிட்டேன்னு தோணிச்சு. குழந்தைகளும் அவளும் கிண்டல் செய்ய ஆரம்பிச்சாங்க.

விசாலம்: நீ என்ன பண்ண முடியும்? உன்னால முடிஞ்சதை நீ செஞ்சே. சில சமயம் நம்ம சக்தியை மீறிப் போயிடறது.

சாம்பசிவம்: சாவுன்னா எனக்கு வந்தாப்பல வரணும். நல்லா சாப்பிட்டு நாற்காலியில போய் அமர்ந்தேன். மார்பை வலிச்சது. சத்தம்கூடப் போட முடியலை. அப்படி ஓர் வலி. தூங்கறாப்பல போயிட்டேன்,

ராமசாமி: அம்மா சாகும்போது நான் அம்மாவையே பார்த்தேன். ராமசாமீன்னு கூப்பிட்டு அப்படியே விழுந்தாள். ஒரு முனகல் இல்லை. வாய் கோண... வாயிலிருந்து நீர் வழிந்தது... அப்படியே விழுந்துட்டாள். அன்னிக்கு முழுக்க எப்போதும்விட நல்லா பேசிண்டு இருந்தாள். நான்கூட எங்கயோ போயிட்டு பத்து மணிக்கு வந்தேன். அதுக்கப்புறம்தான் சாகணும்னு செத்தாப்பல இருக்கு.

(கொஞ்சம் கொஞ்சமாக வெளிச்சம் சிறிதாக மங்கலாகி இருட்டாகிறது)

காட்சி 5

(ராமசாமி டேபிள் மீது தலை கவிழ்த்துப் படுத்து இருக்கிறார். ஒரு மூலையில் 'At the Hour of Death' என்ற புத்தகம். மெதுவாகக் கண் விழிக்கிறார். அவர் எதிரில் யாருமில்லை.)

ராமசாமி: என்ன...!யாருமே இல்லையா?...என் எதிரில பேசிண்டு இருந்தாங்களே...அவங்களெல்லாம் எங்கே? அம்மா இங்கே உட்கார்ந்து இருந்தாள். அம்மா இல்லையா? யாருமே இல்லையா?

(ராமசாமி திக்பிரமையுடன் பார்த்துக் கொண்டிருக்கிறார்)

நான் அவங்களோடு சரியாப் பேசலையா? கொஞ்சம் மோசமா நடந்துண்டேனா? எல்லோரும் கனிவாய்ப் பேசினாங்க... என்னை நிஜம்னு சொன்னாங்களே... நான் நிஜமா, நிழலா! நான் ஏன் அவர்களிடம் கோபமாப் பேசினேன். மிரண்டேன். (At the Hour of Death புத்தகத்தை கையில் வைத்துக்கொண்டு) இந்தப் புத்தகத்துல எழுதி இருக்கிறதெல்லாம் உண்மையா? சாகும்போது ஒவ்வொருவரும் செத்துப் போனவங்களோடு பேசுவாங்கன்னு எழுதியிருக்கு. அப்படித்தானா? நேரில முன்னால செத்துப் போனவங்களைப் பாத்தாப்பல இருக்குமாம். அம்மாகூட அவள் சாகும்போது அப்பாவைப் பார்த்ததாச் சொல்வாள். அப்பா கூப்பிடறார்ன்னு சொல்வாள். அதெல்லாம் உண்மையா? நான் அவங்களைப் பாக்கணும். பேசணும். முடியுமா? முடியுமா? (பெரிதாகக் கத்தியபடி)

(விளக்கு அணைகிறது. காட்சி முடிகிறது.) □

நாடக விமர்சனம்

## 'ஐக்யா'வின் இரண்டு நாடகங்கள்

—முபீன்

''அமைதி, அமைதி கோர்ட் நடக்கிறது'', ''சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து முதல் கிரணம்வரை'' ஆகிய இரண்டு நாடகங்களையும் 'ஐக்யா' குழு ஏப்ரல் 19, 26 தேதிகளில் ராணி சீதை ஹாலில் நிகழ்த்தியது.

விஜய் டெண்டுல்கரின் 'அமைதி, அமைதி கோர்ட் நடக்கிறது' நாடகமும் சுரேந்திர வர்மாவின் 'சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து சூரியனின் முதல் கிரணம்வரை' நாடகமும் 'ஐக்யா'வின் 'அமைதி, அமைதி...' ஆகவும், 'சூரியனின்...' ஆகவும்தான் நிகழ்த்தப்பட்டன. மூல நாடகப் பிரதிகளிலிருந்து பெறப்பட்ட உந்துதல்கள், 'ஐக்யா'வின் சபா நாடக முயற்சிகளில் வெளிப்பட்டன.

விஜய் டெண்டுல்கரின் 'அமைதி...' நாடகத்தில் ஒருவரை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் கோர்ட் காட்சி நாடகமாக்கப்பட்டுள்ளது. அதில் ஒரு குழுவின் நடிகர்கள் ஒத்திகை பார்க்க யாரை விசாரிக்கலாம் என்று எண்ணும்போது அக்குழுவின் ஒரு பெண்ணை-நடிகையை விசாரிக்கலாம் என்று தீர்மானிக்கிறார்கள். அப்பெண்ணை விசாரிக்கும்போது அவள் கருக்கலைப்பு செய்ததை சிசுக்கொலை என்று கூறி, குற்றம் சாட்டி, ஆண்களுடன் அவள் பழகுவதை கண்டனம் செய்து ஒழுங்கான நடத்தையைப் பேணுமாறு தீர்ப்பு வழங்கிவிட்டு இவ்வாறு பேசியதெல்லாம் வெறும் ஒத்திகைக்கான விளையாட்டு என்று கூறிச் செல்லும் அந்த நடிகர்கள் அவளருகே ஒரு கிளிப்பொம்மையை வைத்துவிட்டுச் செல்கிறார்கள்.

'ஐக்யா'வின் 'அமைதி' நாடகத்தில் ஒத்திகையின்போது விசாரிக்கப்படும் பெண் மீது (பாலசந்தர் படத்தின் 'காற்றுக்கென்ன வேலி' பாடலைக் கேட்டு பரவசமடைபவள்) அதே குற்றங்களைச் சுமத்தி அதே தீர்ப்பை வழங்கிவிட்டு அவ்வாறே ஒத்திகை விளையாட்டு என்று கூறிச்செல்லும்போது அவளருகே ஒரு பொம்மையை வைத்துவிட்டுச் செல்கிறார்கள் அந்த நடிகர்கள். பின்னணியில் அப்பெண் பாடுவதுபோல 'காற்றுக்கென்ன வேலி' பாடல் மெதுவாக ஒலிக்கிறது.

ஆணுறவை விரும்பும் பெண், கலாச்சாரக் குறை சுட்டல்களுக்காக அவமானப் படாமல் தொடர்ந்து ஓர் ஆணை நாடி வாழலாம் என்ற ரீதியில்

விஜய் டெண்டுல்கரின் 'அமைதி...' நாடகம் தொனிக்கிறது. ஆணுறவை விரும்பும் பெண், கலாச்சாரக் குறை சுட்டல்களுக்காக அவமானப் பட்டாலும் 'சுதந்திரமாக' ஓர் ஆணுடன் குடும்ப வாழ்வைத் தொடர வேண்டும் என்பது 'ஐக்யா'வின் 'அமைதி...' நாடகம் கொள்ளும் கலாச்சார நம்பிக்கை.

டெண்டுல்கரின் நாடகமும் 'ஐக்யா'வின் நாடகமும் 'ஆணின் அன்பிற்காக ஏங்கும்' லிங்க மையவாத மொழியின் பெண்ணையே காட்டுகின்றன. கலாச்சாரப் பொய்மைகளுக்கிடையில் வக்கிர உணர்வுகளுக்கு நடுவில் ஆண்மை இன்பத்தை நாடும் பெண், லிங்க மையவாத மொழியின் மாதிரிப்படிவம். அப்பெண் மீதான விசாரணை ஒத்திகை என்பது கலாச்சார யூகக் குரல்களின் வெளிப்பாடுதான். அவளின் தனிமொழி, ஆணியச் சிந்தனையை உட்செரித்த தற்காப்பாகிறது.

'ஆணை நாடல், ஆணின் அன்பு' என்ற லிங்க மையவாதத்தின் புராணம் இப்பெண் மீதும் கட்டப்பட்டுள்ளது. ஆணின் இன்பம் கிடைப்பது இங்கு பெண்மையின் விடுதலையாகக் கொள்ளப்படுகிறது. கிளிப்பொம்மையை அவளருகே வைப்பது மீண்டும் ஒரு 'நல்ல' உறவு கிடைக்கும் என்ற நம்பிக்கையை பெண்ணுக்குத் தருவது. வெறும் பொம்மையை வைப்பது, கருவைக் கலைத்துவிட்டாலும் மீண்டும் ஒரு குழந்தை பெற்று குடும்ப வாழ்வு வாழ நிர்பந்திப்பது. ஆண் மையவாதப் பெண்ணுக்குக் கிடைக்கக்கூடியது இதைத் தவிர வேறு எதுவும் இல்லை என்ற ஆணியச் சிந்தனை மீண்டும் இங்கு உச்சரிக்கப்பட்டுள்ளது.

இரு நாடகங்களும் பெண் ஆணை நாடலின் உயர்வைக் கூறினாலும் விஜய் டெண்டுல்கருடையது கலாச்சார ஒழுங்கின்மையையும் 'ஐக்யா'வுடையது கலாச்சார ஒழுங்கையும் தேர்ந்தெடுத்துள்ளன.

சுரேந்திர வர்மாவின் 'சூரியனின்...' நாடகத்தில் ஆண்மை இல்லா அரசன், வாரிசு பிறக்க வேறு வழியில்லாததால் அரசிக்கு வேறு ஒரு கணவனை சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து சூரியனின் முதல் கிரணம்வரை வரித்துக் கொள்ளும் உரிமையைத் தருகிறான். இந்த வாய்ப்பு அவளுக்கு மூன்று முறை கொடுக்கப்படுகிறது. சுரேந்திர வர்மாவின் 'சூரியனின்...' நாடகத்தில் அரசி கணவனாக வரித்துக் கொண்டது தன் முன்னாள் காதலனை. 'ஐக்யா'வின் 'சூரியனின்...' நாடகத்தில் அரசி கணவனாக வரித்தது யாரோ ஒருவனை. இரு நாடகங்களிலும் அந்த அரசி மூன்று முறையும் இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொள்கிறாள். சுரேந்திர வர்மாவின் நாடகத்தில் மூன்று முறையும் தன் முன்னாள் காதலனையும் 'ஐக்யா'வின் நாடகத்தில் மூன்று முறையும் வேறு வேறு நபர்களையும் கணவனாக அரசி வரித்துக்கொள்கிறாள்.

இரு நாடகங்களிலும் ஆண்மை இன்மையின் அதிகார இழப்பைக் கடமைப் பாவையான அரசி; ஏதோ ஒரு வழியில் வாரிசைத் தருவதன்மூலம் ஆண்மை அதிகாரத்தைத் தக்க வைக்கிறாள். ஆண்மை இன்மையை குழந்தை பெறும் இயந்திரமாகி மறைக்கிறாள்.

பொதுவாக, 'சூரியனின்...' நாடகத்தின் ஆண் மையவாதம், கடமைப் பாவையான அரசிக்கு கணவனை வரிக்கக் கொடுக்கப்பட்டிருக்கும் மூன்று வாய்ப்புகளையும் பயன்படுத்தி மூன்று ஆண்களையும் தேர்ந்தெடுக்கலாம் என்ற உரிமையை வழங்குகிறது. ஆனால் சுரேந்திர வர்மாவின் கலாச்சார பயம், அரசிக்கு முன்னாள் காதலனைக் கொடுத்துள்ளது. அரசிக்கு முன்னாள் காதலனைக் கொடுப்பதில் ஏற்படும் களங்கத்தின் காரணமாக யாரையோ கணவனாக வரிப்பதை 'ஐக்யா'வின் கலாச்சாரப் பயம் தேர்ந்தெடுத்துள்ளது.

ஆண் மையவாதத்தின் அதிகாரமொழி இந்த நாடகத்தில் வெளிப்பட்டுள்ளது. வாரிசுரிமையும் அதிகாரமும் இல்லாத, குழந்தை பெறும் இயந்திரமான பெண்ணுக்கு - ஆணால் உருவாக்கப்பட்டிருக்கும் பெண்ணுக்கு, யார் மூலமாக குழந்தை பெறலாம் என்ற தேர்ந்தெடுப்பு மட்டும்தான் வழங்கப்பட்டுள்ளது.

ஆனால் 'சூரியனின்...' நாடகம் ஆண்-பெண் சேர்க்கையைப் பேசுவதாக தோற்றமளிக்க முயன்றுள்ளது. அரசி, அதாவது பெண் இந்த நாடகத்தில் உச்சரிக்கும் ஒரு வாசகமான 'பெண்மையின் நிறைவு குழந்தை பேறில் அல்ல, சேர்க்கையில்தான்' என்பது, ஆண் மையவாத மொழி பெண்ணுக்குக் கொடுத்திருக்கும் ஆணிய சிந்தனை. இங்கு பெண்மையின் நிறைவு என்று கூறுவது ஆண் எண்ணியிருக்கும் பெண்மை நிறைவு. உடல் இன்பத்தை வெளிப்படையாக ஒரு பெண் பேசுவது பெண்ணுக்குரிய சுதந்திரமாக விடுதலையாகக் காட்டப்பட்டுள்ளது. ஆண் பெண்ணுக்கு வழங்கிய சுதந்திரமாக அது இருக்கும்போது. ஆணுக்கான இறுதிப் பயனை விளைவிக்கும் சுதந்திரமாக அது இருக்கும்போது, ஆண் மையவாதத்தின் அடித்தளம், பெண்ணிடம் சேகரமாக அல்லது சேகரமாக்கியிருப்பதுதான் தெளிவாகிறது.

விபச்சாரியின் மனத்துணிவை ஓரிடத்தில் பாராட்டுகிறாள் அரசி. சுரேந்திர வர்மா, தன் நாடகத்தில் அரசிக்கு ஒரு முன் வரலாறு கொடுத்ததினால் விபச்சாரியின் மனத்துணிவை அரசிக்குக் கொடுக்காமல் கலாச்சாரத்தைக் காப்பாற்றியிருக்கிறார். ஆனால் 'ஐக்யா'வின் 'சூரியனின்...' நாடகம் அரசிக்கு அந்த மனத்துணிவைக் கொடுத்துவிட்டது. விபச்சாரியின் சமூக அந்தஸ்து சுரேந்திர வர்மாவின் நினைவில் இருந்த அளவு 'ஐக்யா'வின் நாடகத்தில் இல்லை என்று கூறிவிட முடியாது. விபச்சாரியின் மனத்துணிவை அரசி பெற்றாலும் அரசியின் அந்தஸ்து மாறாது என்பதில் 'ஐக்யா'விற்கு இருக்கும் நம்பிக்கை வெளிப்படுகிறது.

ஆணிய, ஆண் மையவாதப் பெண்களை மீண்டும் மீண்டும் உருவாக்குவதில் 'அமைதி...', 'சூரியனின்...' நாடகங்களும் தவறவில்லை. □

அண்மையில் காலமான மலையாள நாடக ஆசிரியர்

## தோப்பில் பாஸியின் பேட்டி

அரசியல் அரங்கத்திலிருந்து இலக்கிய உலகுக்கு வந்தவர் தோப்பில் பாஸி. ஒரு எளிய விவசாயக் குடும்பத்தில் பிறந்து வைத்தியனாக மருத்துவக் கலா சாலையில் தமது கல்வியைத் தொடங்கிய இவர் தேச விடுதலைப் போராட் டத்தில் பாய்ந்து பின்னர் மனித விடுதலைக்காக பொது உடைமைக் கட்சியில் சேர்ந்து அந்தக் கருத்துக்களுக்காக நாடகம் எழுதத் தொடங்கியவர். சோஸலிச யதார்த்தவாத நாடக முறையான ரியலிச நாடகப் பாரம்பரியத்தை மலையாள நாடக உலகில் முப்பது வருடங்களுக்கு முன் துவக்கிவைத்த முதல் முயற்சிக்காரர். இவரது 'நீங்கள் என்னை கம்யூனிஸ்டு ஆக்கினீர்கள்' என்ற முதல் நாடகம் மலையாள நாடக இலக்கியத்திலும், மேடை நாடகக் கலை யிலும், படைப்புத் துறையிலும் ஒரே நேரத்தில் பெரும் மாறுதல்களைச் சாதித் தது. கேரள மக்கள் இந்த நாடகத்துக்கு அளித்த ஆச்சர்யமான வெற்றி மலையாளத்தை மட்டுமல்ல பிற மாநிலங்களையும் பாதித்தது. 1949களிலேயே இந்த நாடகம் தென்மாவட்டங்களில் சக்தி நாடக சபையரால் பலமுறை வெற்றி கரமாக நடத்தப்பட்டுள்ளது. இதைத் தொடர்ந்து தோப்பில் பாஸி 'மூடியனாய புத்திரன்', 'சர்வே கல்லு', 'அஸ்வமேதம்', 'கூட்டுக் குடும்பம்', ,சரசய்ய' போன்ற இருபதுக்கும் மேற்பட்ட நாடகங்களை எழுதி மேடையேற்றி மலை யாள நாடகத்துக்கு ஒரு புதிய மரபை வழங்கியவர். கே.பி.எஸ்.சி. நாடக மன்றம் என்னும் தனது மன்றத்தின்மூலம் கேரளத்தின் மூலை முடுக்கெல்லாம் நாடகங்கள் நிகழ்த்தினார். இவரது நாடகங்கள் பலவும் பல இலக்கியப் பரிசு களையும், மாநிலப் பரிசுகளையும் பெற்றவை. நாடகத்தைத் தொடர்ந்து திரைப்படத் துறையிலும் இவரது பணி சிறந்தது. இவரது திரைக்கதை வசனங் களும், திரை ஆக்கங்களும் ஜனரஞ்சகமான வெற்றியையும், கலா பூர்வமான இலக்கிய வெற்றியையும் ஒருசேரப் பெற்றவை.

கேள்வி : நாடகத்தைப் பற்றி உங்கள் தீர்வு என்பது என்ன?

தோப்பில் பாஸி : ஒரு கதையை உரையாடல்கள் மூலம் சொல்லிவிட்டால் அது நாடகமாகாது. நாடகம் என்பது உணர்ச்சிகளை வெளியிடும் ஒரு களம். உணர்ச்சி வெளியீடு என்றால் நம்பத்தகுந்த உண்மையான உணர்ச்சி வெளியீடு. இவைகளிலும் இரண்டு விஷயங்கள் உண்டு. பாத்திர வரம்புக்குட்பட்ட உணர்ச்சி வெளியீடு. அடுத்தது உணர்ச்சி வெளியீட்டை நவரசங்களும் இணைத்து ஒரு கட்டுப்பாட்டுடன் வெளியிடுதல். இந்த விஷயங்கள் நாடகத்தில் ஒன்றாக இணைந்திருக்கின்றன. ஒவ்வொரு சலனமும், அசைவும் ஒவ்வொரு ரசத்தையும் வெளியிடத்தகுந்த சந்தர்ப்ப

மாய் நாடகம் எழுதிக் கொள்ளப்படவேண்டும். இதுவே ரசபூர்ணம். ரசக் குறைவான, ரசமுரணான உணர்ச்சி வெளியீடு நாடக மேடையிலும், நாடக இலக்கியத்திலும் ஆபாசமாய் முடிந்துவிடும். இதுவே ரச விச்சி. நாடகத்தில் ஒருபாட்டு வந்துவிட்டால், ஒரு நடனம் ஆடிக்காட்டப்பட்டால் அதைப் பெரிய தவறாக, ஆட்சேபமாக விமர்சிக்கிற விமர்சகர்களை எனக்குத் தெரியும். அந்த அபிப்பிராயங்கள் நாடகங்கள் என்பது என்ன என்பதை அறியாமல், புரிந்து கொள்ளமுடியாமல் போவதால்தான் இவர்கள் இப்படி இருக்கிறார்கள் என்பதை நம்புகிறவன் நான். நாடகத்தின் போக்கில் ஒரு கதாபாத்திரம் தேவையில்லாத இடத்தில் நுழைந்து ரச விச்சி ஏற்படுத்தினாலும், ஒரு உரையாடல் தேவையில்லாத இடத்தில் அதிகபட்ச பேச்சாய் ரச விச்சி உண்டாக்கினாலும் நாடகத்தின் அழகு சிதையும். ரச விச்சி உண்டாக்குகின்ற கானத்தையும், நடனத்தையும் நாடகத்திலிருந்து விலக்கவேண்டும். அதற்கு நேர்மாறாக நாடக சந்தர்ப்பத்தில் அதன் மூல ஸ்தாயியான அடிப்படை ரஸத்தையும், உணர்ச்சிகளையும் முன்னே எடுத்துச் செல்லத் தக்க ஊட்டம் நிறைந்த ஒரு பாடல் அந்தச் சந்தர்ப்பத்தில் வந்தால் அது மிகச் சிறந்த நாடகீய உணாச்சி வெளிப்பாடேயாகும். அது ரஸ விச்சியாகாது. கோடானுகோடி புதுமைகளும், மாறுதல்களும் வநதாலும் ரஸத் தேர்ச்சி என்பது என்றைக்கும் உதவக்கூடிய மூல ரகசியமாகவே இருக்கும். நிறங்கள் ஏழே ஏழுதான் என்றாலும் அவைகளின் கூட்டுக் கலப்பால் எத்தனையெத்தனை புதுநிறபேதங்களை ஒன்றிணைத்து எத்தனை புதிய புதிய உணர்ச்சி வெளியீடுகளை வெளியிட முடிகிறது. அதுபோல ரஸங்கள் ஒன்பதே என்றாலும் அவைகளின் கூட்டுக்கலப்பால் எத்தனையோ புதிய புதிய ரஸ பாவங்களை வெளிக்காட்ட முடியும் அல்லவா? ஒரு நாடக ஆசிரியனின் மூலமாகவும், முடிவாகவும் இந்த சோதனைதான் முன் நிற்கிறது. இந்த இடத்தில்தான் நாடகக் கலைஞனுக்கும், நாடக ஆசிரியனுக்கும் புதிய புதிய சாயங்களை படைப்பதற்கு உதவுகின்ற நாடகீய சந்தர்ப்பங்களை உருவாக்குவதில்தான் ஒரு நாடகத்தின் வெற்றி அடங்கியிருக்கிறது.

அனுபந்தமாக இன்னொன்றையும் சொல்லி விடுகிறேன். ரஸ வெளியீடு என்ற மூல தர்மம் சரியாக அமைக்கப்பட்டால் நாடக மேடையில் நிச்சயம் வெற்றி பெறும். ஒரு நாடகத்தின் உரைகல் அதன் பார்வையாளர்கள் தான். எத்தனை அற்புதமாக படைக்கப்பட்டிருந்தாலும் வெறும் சாதாரண ரசிகன்கூட மிகச் சிறந்த நாடகத்தையும் ரசிக்கமுடியும், ரஸத் தேர்ச்சியுடன் நாடகம் அமைக்கப்பட்டிருந்தால். மிகப் பெரிய உதாரணம் 'கதகளி' அரங்கம். மிகவும் பாண்டித்யம் பெற்ற நுண்மை சேர்ந்த கலைப்படைப்பு 'கதகளி' என்றாலும் கூட எழுத்தறிவில்லாத பாமர ஜனங்கள்கூட வாயைப் பிளந்து ஆட்டத்தை கேரளத்தில் ரசிக்கிறார்கள் என்பது இதனால்தான். நவ ரஸங்களையும் சரியான இடத்தில் சரியான முறையில் வெளியிட்டால்

பாண்டித்யமோ, புலமையோ இல்லாதவர்களுக்கும்கூட நாடக அனுபூதி சிந்தித்துவிடுகிறது என்பதை நிதர்சனமாகக் காணலாம். ஆகவே சாமான்ய ஜனங்களை 'லோ கிளாஸ்' என்று சொல்லி ஒதுக்கி வைத்துப் பிரயோசனம் இல்லை. வெகு ஜனத்தின் கைத் தட்டல்களைப் பெற்றுவிட்டவர்கள் மோசக்காரர்களும் அல்ல என்பது மாத்திரமல்ல, எல்லா சிறந்த நாடக நூல்களும் பொது ஜனங்களின் கைத் தட்டல்களைப் பெற்றவைதான்.

என்னைப் பொறுத்தவரை பொதுஜனங்கள் எங்ஙனம் வரவேற்கிறார்கள் என்பதைப் பார்த்து படித்துக் கொண்டுதான் நான் எனது நாடகத்தின் மேன்மையைத் திட்டப்படுத்திக் கொள்கிறேன். இறக்குமதி செய்யப்பட்ட தத்துவங்கள் எதையும் புதிய இலக்கியக் கொள்கைகள் எதையும் என் வழியில் தடைகளாக நான் வைத்துக் கொள்வதே இல்லை.

கேள்வி: பிற இந்திய மொழிகளில் வெளிவந்துள்ள நாடகங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மலையாள நாடகங்களுடைய நிலை என்ன என்று சொல் வீர்களா?

தோப்பில்பாஸி : தாரதம்மியப்படுத்திப் பார்த்தால் மலையாள நாடகங்கள் இந்தியமொழிகளில் உன்னதமானவை, உயர்ந்தவை என்று மட்டுமே தெரிகிறது எனக்கு வங்காளி, தமிழ், குஜராத்தி, மராத்தி, இந்தி ஆகிய எல்லா மொழிகளிலும் அபூர்வமாய் சில நல்ல நாடகங்களைப் பார்க்க முடிகிறது. ஆனால் இலக்கியத்திலும், நாடக மேடையிலும் அதாவது எழுத்து வடிவிலும், மேடை வடிவிலும் ஒரே நேரத்தில் சிறந்த நாடகங்கள் மலையாளத்தில் மட்டுமே வெளிவந்திருக்கின்றன. இதுபோல் பிறமொழிகளில் என்னால் காணமுடியவில்லை. ஏதாவது கொஞ்சம் உண்டு என்றால் அது உருது இலக்கியத்தில்தான். இண்டியன் பீப்பில்ஸ் தியேட்டர் அசோஸியேசனில் (IPTA) நான் அங்கத்தினனாய் இருந்த காலத்தில் மற்ற அங்கத்தினர்களோடு செய்த சர்ச்சைகளின் போது தெரிந்து கொண்ட உண்மை இது. அந்த நாடகங்கள் அப்படி வெற்றி பெறக் காரணம் மேடைக்கலை, மேடை அமைப்புக்கலை, அலங்காரக் கலை மேடை ஒளியமைப்பு ஆகிய கலைகளில் (இந்தியாவின் மற்ற மாநிலங்களில் இன்றைய நவீன புதுமைகள், அமைப்புகள்) எல்லாவற்றிலும் நேர்ந்துள்ள புதிய வளர்ச்சிகள்தான். அதே சமயம் அந்த வளர்ச்சிகளினால் நேர்ந்துள்ள இயலாமைகளும் காரணம். உதாரணமாக ''அங்கிர்'' ''ஜிஸ்தேஷ் மேய்ம் கெங்கா பெஹ்த்தீ ஹை'' போன்றவங்காளி நாடகங்கள் தொடர்ந்து ஒரே மேடையில் தினம் இரண்டு காட்சிகள் வீதம் இரண்டு வருடம் நிரந்தர நாடக மேடையில் தொடர்ந்து நடத்தப்பட்டது.

இரண்டு நாடகங்களையும் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் இந்த நாடகங்கள் இரண்டும் புத்தக வடிவில் அச்சு வடிவில் கொண்டு வரவேண்டும் என்றோ அது நாடக இலக்கியத் துறையில் உதவும் என்றோ அவர்கள் யாருக்கும் தெரியவேயில்லை. நம்முடைய நிரந்தர நாடக மேடையான கலா நிலையும் தனது ஒரே நாடகத்தைக்கூட புத்தகமாக வெளியிட்டிருக்கிறது. விஸ்வ கேரளகலா சமிதி ஒரு நாடகம் அரங்கேற்றும் போது அது என். என். பிள்ளையினுடைய நாடகம்தான் என்றும் கே.பி.ஐ.சி ஒரு நாடகம் அரங்கேற்றும் போது அது தோப்பில் பாஸி உடையது என்றும் கேரளத்து ஜனங்கள் துல்லியமான முக்கியத் தன்மை யோடு புரிந்து கொண்டுதான் நாடகத்தை வரவேற்கிறார்கள். எதனால் இப்படி என்று கேட்டால் நாங்கள் மேடை என்னும் அரங்கின் அடிமையாக அல்ல நாடகம் எழுதுவது டெக்னிக்கின் அடிமையாகவா நாடகம் எழுதுகிறோம்? இல்லை. வளர்ந்து வரும் நவீன மேடை வசதிகள். சௌகர்யங்கள் எல்லாம் நாடகத்தின் உதவியாக அரங்கத்துக்கு வெளியே தான் நிற்க வேண்டிவரும். உணர்ச்சி வெளியீடுதான் பிரதானமாக நாடகத்தின் மோதலாக வெளிப்பட வேண்டும். நாடக இலக்கணத்தில் சுலபத்தில் உணர்ச்சி வெளியீடு அடக்கியே நிர்வகிக்கப்பட வேண்டும் அல்லது அடக்கி நிலைப்படுத்த வேண்டும் என்று கூறப்படுகிறது. சுலபத்தில் வருவது லேசாகவே ரௌத்தரம் (கோபம்) கொள்ளுவது இவை உதவாது—என்று கூறப்பட்டிருக்கிறது. (மரணம், சவம், மிருகங் களை காட்டுதல் என்பன போன்ற காட்சிகள் நாடகத்தில் தடை செய்யப் பட்டிருக்கிறது ) காரணம், ஒரு கழுதையை நாடக மேடையில் கொண்டு வந்தால் உடனே கூட்டத்தில் பெரு நகைப்பும் கூச்சலும் உண்டாவதோடு ஹாஸ்ய ரசத்திற்கு இடம் கொடுத்து விடும். அந்த இடத்தில் நாடகம் செத்து விடும். இந்தக் குற்றம் ஸ்டேஜுக்கு அடிமையாகிப் போகிற நாடகங்களுக்கு சகஜமாக இருக்கிறது. நான் கூறுவது என்னவென்றால் அலங்காரங்கள், அணிமணிகள் வண்ண ஒளிவிளக்குகளின் வீச்சுகள் ஆகியவைகளோடு நாடகம் பார்ப்பவர்களின் கண்ணைப் பறிக்கிற உத்திகளோடு மாயலோகத்திற்கே அவர்களைக் கொண்டு போகிற வங்காளி, மராட்டி, தமிழ், போன்ற நாடக மேடைகளில் இன்று உள்ள குழப்பம் மலையாள நாடக மேடை அரங்கத்தின் படைப்புகளில் இல்லை. வளர்ந்து வரும் மலையாள நாடகத்தோடு ரசிகர்களும் வளர்ந்து வருவதன் மூலக்காரணம் இந்தப் புறக் கவர்ச்சிகளில் மலையாள மேடை இறங்கு வதில்லை என்பதே. அதனால் தான் மலையாள நாடகங்களுக்கு இலக்கியத் தரமும் கூடுகிறது. நமது நாடகங்களின் தரம் பிறமொழி நாடகங்களோடு ஒப்பிடும் போது மெச்சப்பட்ட உயர் நிலையில் இருக்கிறது.

கேள்வி: மலையாள இலக்கியத்தில் நாவல் என்னும் இலக்கியத் துறைதான் அதிகம் வளரும் துறை என்ற அபிப்ராயத்தோடு நீங்கள் ஒத்துப் போவீர்களா?

தோப்பில்பாஸி: நாவல் சிறுகதை என்ற இலக்கியத்துறைகளோடு ஒன்றும் நாடக இலக்கியத்துறை பின்தங்கிவிடவில்லை. நிச்சயமாகவே நாடகம் வளர்ந்துதான் வருகிறது.

கேள்வி: நாடகத்தை குறித்து ஒரு நவீன [தயாரிப்பு] தயாரெடுப்பு அவசிய மல்லவா? நவீன நாடக வளர்ச்சிக்கு என்னவெல்லாம் செய்ய வேண்டும்? அந்தக் கலையின் மூலவடிவத்தைப் பற்றி உள்ள இலக்கண விஞ்ஞான ஞானம் ஒரு நாடக ஆசிரியனுக்கு அவசியம் அல்லவா?

தோப்பில்பாஸி: இலக்கண விஞ்ஞான ரீதியான ஞானத்துக்கான ஆய்வும், படிப்பும் மலையாளத்தில் அவசியம்தான். இனி பெறவேண்டிய வளர்ச்சிகள் அவை. ஆனால் இன்று தலையெடுத்திருக்கும் சிலர் நாடக பாராயணம் செய்வதும் மேடை ஆய்வுகளும் நாடக களரிகளும் கேம்புகளும் கூடி பயனில்லை. நாடக நவீனத்துவம் வந்து விடாது. அவர்கள் என்ன செய்கிறார்கள் என்றால் மேலை நாடக உலகில்கூட பிற்பட்டுப் போய்த் தனிமைப்படுத்தப்பட்ட ஒரு வழியைத்தான் புதுமை என்று ஏமாந்து பின்பற்றுகிறார்கள். சொந்தமாக இவர்கள் ஒரு புதிய மரபை உருவாக்கச் சக்தியில்லாதவர்கள். நாடகத்தை பற்றிய ஆய்வு படிப்பு என்பது உண்மையில் நாடக நூல்களில் அடங்கிக்கிடக்கிறது. மேலை நாடுகளில் வழங்கும் நாடக இலக்கியங்களையும், சமஸ்கிருத நாடக இலக்கியங் களையும், நம்மவர்கள் ஐரோப்பிய நாடக இலக்கிய தன்மைகளையும் ஒப்பிட்டு நன்றாக கற்றுக்கொள்ள அவைகளை மேடைக்கலையுடன் பயிலுவது ஒன்றுதான் இன்றைய காலகட்டத்தில் அவசியமாய் இருக் கிறது. இதற்கிடையில் கூட்டமாக அமர்ந்து நாடகம் படித்துக் கேட்பது என்கிற நிகழ்ச்சி ஏற்பாடு வழக்கத்தில் வந்திருக்கிறது. என்ன அவர்கள் புதிதாக நாடக உலகத்திற்கு புதுமை செய்து விட்டார்கள் என்று எவ்வளவு ஆலோசித்தாலும் எனக்கு தெரியவே இல்லை. நாடகத்தைநடிக்க வேண்டும். அதை விட்டுவிட்டு கூட்டத்தை கூட்டி நாடகத்தை மாற்றி மாற்றி வாசிக்க இந்த நிகழ்ச்சிகள் நாடகத்தையும் சமூகத்தையும் நாடக மேடை யையும் எந்தவிதம் முன்னேற்றி உதவப்போகிறதோ எனக்குத் தோன்றவே இல்லை. பரவாயில்லை. போகட்டும். இவைகள் புதுமைகள் என்கிறார்கள். பாதகமில்லை. இவைகளெல்லாம் ஒரு ரசமான அனுபவங்கள்தான். புதுமைதான். இதில் ரசமே. ஆனால் முழுகிப் போய்க்கொண்டிருக்கும்

நாடக மேடையை உயர்த்தெழச் செய்ய ஏதோ செய்வது போன்ற பாவனையில் இவர்கள் நாடகத்தைப் படிக்கிற நிகழ்ச்சியாய முக்கியத்துவம் தருவது கஷ்டமான விஷயம் தான்.

கள்வி: நாடக வாசிப்பு, ஆராய்ச்சி இவைகள் வேண்டாம் என்று கூறுகிற நீங்கள் நாடக ''ஒர்க்ஷாப், கேம்ப்'' முதலான கிராப்ஃட் கிளாஸ்கள் ஆகியவை புதிய நாடக எழுத்தாளர்கள் மாணவர்களை நேர்வழி நடத்து வதற்கும் புதுமைகளுக்குத் திருப்பி விடவும் இலக்கண, விஞ்ஞான, சரித்திர அடிப்படையில் அறிவு தருவதற்கும், உதவிகரமாக இருக்காது என்றா எணணுகிறீர்கள்?

தோப்பில்பாஸி: நாடகப் பட்டறைகள், கலரிகள், ஓர்க்ஷாப்கள் எல்லாம் கூட்டுவது அதன் எதார்த்த அர்த்தத்தில் நடப்பது என்றால் நல்லதுதான். நாடக லக்சன, லச்சிய நூல்களின் படிப்புதான் பிரதானமாக உதவும். அது போன்ற ஆய்வு கருத்தரங்களில் மேற்சொன்ன மாதிரியில் தான் படிப்பும், பாராயணமும், நடப்பும் சிறப்பாய் உதவும் என்பது எனது நம்பிக்கை. ஒரு ப்ரத்யேக நாடக நூலின் படைப்பு முறை கதாபாத்திரங் களின் தனித்தன்மை, நாடகமாந்தரின் உணர்ச்சி வெளியீட்டுத்திறன் நாடகீயத் தன்மை என்ற பல மூல ரகசியங்களை நோக்கி விரல் நீட்டி சுட்டிக் காட்டியபடி நிற்கும் ஒரு ஆசிரியன் நிலையில் ஒரு விமர்சக நிலையில் வகுப்பு எடுத்து கற்றுக் கொடுக்க வேண்டியதுதான் இன்றைய தேவையே ஒழிய, வெறும் பரிசோதனைகள் அல்ல

கேள்வி: படைப்புத் திறனோடு நாடகச்மேதையும் கலந்த பிரதிபா சக்தி மட்டும் இருந்தால போதுமா? நாடகம் படைக்க?

தோப்பில்பாஸி: இல்லை முடியாது, நாடக சிற்பம் எப்படி உண்டாக்க வேண்டும் என்பது தெரிந்திருக்க வேண்டும். வாழ்க்கை அனுபவங்களும் கைமுதலாம் அவசியம் வேண்டும்.

கேள்வி: நாடகம் கலையுலகில் மூர்த்த சிறந்த கலை வடிவமாய் இருக்கிறதா

தோப்பில்பாஸி நாடகம் சிறந்த இலக்கிய உருவம் கொண்டது. சமஸ்கிருதத்தில் ''நாடகாந்தம், கவித்துவம்'' என்ற வழக்குச் சொல் இருந்து வருகிறது. அதன் பொருள் எது வேண்டுமானாலும் எழுதி நாடகமாக்க முடியாது. கவிதை முற்றி நாடகம் பிறக்கிறது சிறந்த நாடகம் கவிதையாய்யிருக்கிறது. .எந்த இலக்கியவடிவத்திலும் நாடகீயத் தன்மை உள்ளே அடங்கியிருக்கிறது. எந்த இலக்கிய படைப்பில் நாடகீயத் தன்மை முற்றி முழுமித்து நிற்கிறதோ அந்தப்படைப்புதான் சிறந்த

வெற்றியை எட்டுகிறது. நாடகீயத் தன்மை கூடும் போதுதான் இலக்கியத் தன்மையும் கூடுகிறது. அதனால்தான் நாடகீயத் தன்மை முற்றி நிற்கிற இலக்கிய உருவமான தனித்துறையே இருந்து வருகிறது.

கேள்வி: நமது நாடகங்களில் காணப்படும் பொதுவான குறைகள் என்னென்ன என்று சொல்ல முடியுமா?

தோப்பில்பாஸி: நாடகம் என்பது இன்னதுதான் என்ற மூல்யம் தெளிவு படாததுதான் காரணம். கதாபாத்திரங்களின் நாவின் வழியாக ஏதாவது ஒரு கதையைச் சொல்லி முடித்து விட்டால் போதும். அது நாடகமாகிவிடும் என்று தவறான கண்ணோட்டம் காரணமாயிருக்கிறது.

கேள்வி: மலையாள நாடகங்கள் அன்னிய நாடுகளிலிருந்து பறித்து நடப்பட்ட ஒரு கலை வடிவமா? சுயம் ஏதும் இல்லையா?

தோப்பில்பாஸி: தமிழ் நாடகங்களின் பாதிப்பும் தமிழ்நாட்டின் சுவாதீனமும் மலையாள நாடக வளர்ச்சிக்கு ஆரம்ப காலங்களில் மிக அதிகமாகவே உதவி இருக்கிறது பிற்காலத்தில் ஆங்கில நாடகங்களும், நாடகமேடையும் உதவியது. ஆனாலும் சமஸ்கிருத நாடகங்களும்தான் நமது நாடக இலக்கியஉலகுக்கு அடித்தளம் இட்டது.

கேள்வி: நம்முடையது என்று சொல்லிக்கொள்ளத்தக்க ஒரு நவீன நாடக சங்கல்ப்பம் வார்த்தெடுப்பதற்குரிய முயற்சிகள் நடந்து கொண்டிருக் கிறதா?

தோப்பில்பாஸி: நடந்து இருக்கிறது. நமக்கே நமக்குச் சொந்தமான நாடக வடிவம் இப்போது நடைமுறையில் இருக்கிறது. எல்லாக் காலகட்டத்திலும் அது வளர்ந்து வந்து கொண்டும் இருக்கிறது. நமக்கு சொந்தம் என்று சொல்லத்தக்க நாடக வடிவம் ஒன்று ஒரு நாடக சம்பிரதாயத்தோடு நடைமுறையில் இருந்து வருகிறது.

கேள்வி: கொஞ்சம் விவரித்து சொல்கிறீர்களா?

தோப்பில்பாஸி: ஒரு விவரம் நான் கூற விரும்புகிறேன். உலகில் உள்ள எல்லா நாடக அரங்குகளைப் பற்றியும் நாடகங்களைப்பற்றியும் தெரிந்து கொள்வதற்காக பல வருடங்களைச் செலவழித்த ஒரு கலா வியக்த்தியை

நான் அறிவேன். அவர்தான் பால்ராஜ் சகானி அவர் சில மலையாள நாடகங்களைத் தொடர்ந்து பார்த்து தெரிந்துகொண்டபின் சில அபிப்ராயங்களைக் கூறியிருக்கிறார். அதை குறித்து சில அபிப்ராயங்களை எழுதியும் இருக்கிறார். அமெரிக்க நாடக மேடை, சோவியத் நாடக மேடையிலும் இவைகளிலிருந்து நிறைய வித்தியாசப்படுகின்ற சைனீஸ் நாடக உலகத்திலும் இந்தியாவில் வட இந்திய நாடக மேடைகளிலும் காணமுடியாத சில பிரத்தியேக அடிப்படையானத் தத்துவங்கள் மலையாள நாடக மேடையில் பால்ராஜ் சகானி கண்டு இருக்கிறார்.

1 அவையாவன: மலையாள இலக்கிய நாடகங்கள், வாழக்கையோடு மிகவும் நெருங்கி இருக்கின்றன. இது நாடகம், வாழ்க்கை என்று வித்யாசம் காண முடியாது. மிகப் பெரிய நெருக்கம்.

2 மலையாள நாடக மேடை மிகப்பெரிய ஜன சமூத்தின் முக்கியமான கலையாக, இயக்கமாக இருக்கிறது. இதனைப் பற்றி பால்ராஜ் சகானி இப்படிச் சொல்கிறார் ''வங்காளி நாடக அரங்கு என்பது வெறும் கல்கத்தா நாடக மேடைகள் மட்டும்தான்'' "மராட்டி, குஜராத்தி நாடகம் என்பது வெறும் பாம்பே மார்க்கெட் நாடகங்கள் தான்." இவைகளில் எல்லாம் ''வங்காளியுடையதோ குஜராத்தியுடையதோ, மராட்டியுடையதோ ஆகிய அந்தந்த மண்ணின் மணம் கமழ்வதைவிட அதிகமாக மேலை நாடுகளின் மணமே அந்த நாடகங்களில் அப்பட்டமான வெளிப்பாடாக இருக்கிறது. ஆனால் மலையாள நாடக உலகம் என்று கூறப்படுவது. கேரளத்திலே உள்ள எல்லா நகரங்களின் கிராமங்களின் மூலை முடுக்கு களின் நாடக மேடைகள் என்று சொல்ல வேண்டும். அந்த நாடகங்களைக் கண்டால் கேரளத்தைக் காணலாம்" எனக்கும் நம்முடைய நாடக மேடையைப்பற்றி அவர் சொன்னதுபுத்தி பூர்வமானது என்று தோன்றியது. காரணம் நம்முடைய நாடக மேடையின் துவக்கம் கிராமப் பிரதேசங்களில் இருந்ததுதான் என்பதை மறுக்க முடியாது. மற்ற இலக்கியத் துறையில் இருந்தெல்லாம் நாடகம் மலையாளத்தில் வேறுபட்டு நிற்பதற்குக் காரணம் இதுதான்.

கேள்வி: ரொமான்டிஸிசம் தொடங்கி Absurd Drama வரையுள்ள வெவ்வேறு விதமான மேலை நாட்டு நாடக சங்கேதங்களைப் பற்றி தங்கள் அபிப்ராயம் என்ன?

தோப்பில்பாஸி: அந்த புதிய யுத்திகளைக் குறித்துப் பூர்ணமான அறிவு எனக்கில்லை. தெரியாத காரியங்களைப் பற்றி பெரிய அபிப்ராயங்கள் கூறுகின்ற நடவடிக்கை எனக்கில்லை.

கேள்வி: நாடகம் என்கிற கலா ரூபத்தின் துவக்கம் எப்படி எங்கே என்று கூறமுடியுமா?

தோப்பில்பாஸி: சமஸ்கிருத நாடகங்களின் உற்பத்தி பற்றி ஒரு வரலாறு உண்டு. சோமையாகம் நடத்துகின்ற வேளைகளில் முன் கூட்டியாகவே சோமலதா கொடிகளைக் கொண்டு வந்து சேர்த்து வைப்பது கூடாது என்பது பெரியோர் வாக்கு. யாகத்தின் ஒரு ப்ரத்யேகக் கட்டத்தில் ஸோமம் (பானம்) வேண்டுமா வேண்டுமா? என்று கூவி கேட்டுக் கொண்டு விற்பனைக்காரன்போவான். அவனைசோமயாகத்து(ப்ராமணர்கள்)ரிஷிகள் வாங்கி அக்னியில் சோமத்தை (சோம பொடிகளைப் பிழிந்த பானம்) ஊற்றி அக்னியை வளர்ப்பது யாகத்தின் வெற்றிக்கு அவசியமென்று வேதகாலத்தில் நம்பினார்கள். எல்லாக் காலங்களிலும் பொழுதுகளிலும் அப்படியே அது நடப்பது முடியாது. சில வேளைகளில் சோம லதா விற்பனையாளன் அகப்படமாட்டான்! யாகம் நடக்கிற இடம் ஆரன்ய மாயிருக்குமல்லவா? அதனால் யாகத்தின் நடுவில் சோமரசம் விற்பனை செய்ய முடியாது போயிருக்கும் சந்தர்ப்பங்களும் உண்டு. எனவே சோமயாகத்தின் யாகங்களில் சோமரச விற்பனையாளன் வேடத்தை யாராவது சிலர் புனைந்து கொண்டு யாக வேளையில் விற்பனையாளனாக நடிக்க வேண்டி வந்தது. சிலர் இந்த சோமரச வினியோகத்துக்காக வேடம் கட்டினார்கள். இது பின்னர் மரபானது. மனிதன் முதன் முதலாய் வேடம் கட்டி நடித்தது. இப்படித்தான் இதுவே பின்னர்பூரண வஸ்த்திராலங்காரங்களோடு பூஜைகள் பெரிய விழாக்கள் என விரிந்து நடிப்புக்கும் பாட்டுக்கும் ஜப மந்திர உச்சாடனங்களுக்கும் வழி வகுத்தது. நடிப்பு ஒரு கலா வடிவமாக வளர்ந்து வர இவைகள் மூலமாயின. ஸோமலதாவிற்பனைக்காரர்களாய் நடிப்பைத் துவங்கியவர்கள் பேச வேண்டிய சிரமம் ஏற்படுத்தப் பட்டபோது காட்சி உருவம் பிறந்தது. யாகத்தில் பங்கெடுத்தவர்களும் சம்பிரதாயத்தையொட்டி நடித்து வசனம் பேசவேண்டி வந்தது. யாகத்தைக் காண உட்கார்ந்திருந்த கூட்டம் பார்வையாளர்களாய் பக்தர்களாய் வளர்ந்து ரசிகர்களானார்கள். நடித்து பஜனை செய்தவர்களுக்கும் பார்வையாளர்களுக்கும் இடையிடையில் சந்தேகங்கள் கேள்விகள் பிறந்த போது அந்தச் சபையினர்களும் பங்குதாரர்களாய் யாகக் குண்டத்தைச் சுற்றி பேச்சும் வசனமும் பரவி அதையும் பார்வையாளர்கள் ரசித்தார்கள். இப்படி நடிகர்களுக்கும் பார்வையாளர்களுக்கும் ஒரு நெருக்கமும் உறவும் நேர்ந்தது. ஸ்டேஜில் உள்ளவர்களும் ரசிகர்களான சபையினரும் நெருங்கி இருந்த இந்த மிகப்பழையஆரம்பம்தான் நமது நாடகமேடை ஆரம்பம் என்று சொல்ல வேண்டும். இன்று மேடையை நோக்கி இப்படி கேள்வி கேட்பதும் மேடையிலிருந்து பதில் கூறுவதுமான கலவை—நாடக

ரசனைக்கு முரணானது என்ற சிந்தனை முடிவு இருந்தாலும் கூட அந்தப் புராதன பந்தம் இன்னும் நடிகர்களிடையிலும் சபையினரிடயிலும் நம் நாட்டில் எங்கும் இருந்து வருகிறது. அதுதான் நாடகத்தின் மர்மம்.

கேள்வி: ரசிகர்களின் ரசனையை அறிவார்த்தமாய் கலாமயமாய் உயர்த்து வதற்கு என்ன செய்ய வேண்டும்?

தோப்பில்பாஸி: நல்ல நாடகங்களை எழுதினால் போதும்.

கேள்வி: படிப்பதற்கு உகந்த இலக்கியமாக நாடகம் இருந்தால் அது நடிப்பதற்கும் மேடையேற்றுவதற்கும் தகுதியானதாயிருக்குமா?

தோப்பில்பாஸி: முதலிலேயே சொன்னேனல்லவா? நாடகம் என்பது மேடையில் அரங்கேற்றுவதற்கும்—வாசித்து இன்பம் அடைவதற்கும் உரியதாய் இருக்க வேண்டும். படிப்பதற்கேற்ற நாடகம் நடிப்பதற்கும் ஏற்றதாய் அமைய வேணும். அப்படியில்லையென்றால் அது அந்த நூலின் குற்றம். நாடக மேடை பற்றி ஞானமில்லாததால் வந்த கோளாறு இது.

கேள்வி: பெரும் இலக்கிய கர்த்தாக்கள் எழுதும் நாடகம் கூட சில நேரங்களில் நாடக மேடையில் வெற்றி பெறாமல் போய் விடுவது ஏன்?

தோப்பில்பாஸி: நல்லமுறையில் மேடையில் அவை வெளிப்படாததாயிருக் கலாம்.

கேள்வி : நாடகத்தில் கதை தானே லட்சியமாயிருக்க வேண்டும்? அபிப்ராயம்?

தோப்பில் பாஸி : என்னைப் பொறுத்தவரை நான் ஏதாவது அறைந்து ஓங்கி சொல்லவேண்டும் என்று ஒரு கருத்து ஓங்கும் போதுதான் நான் நாடகம் எழுதியிருக்கிறேன். அதாவது நாடகத்தைச் சொல்ல ஒரு அடிப்படை மூல கருத்தான ஒரு காரணம் வேண்டும் எனக்கு! நாடகா சிரியன் உத்தேசித்த ஒரு கருத்தாக்கம் படிக்கிற வாசகர்களிடம் காட்சி உருவில் காண்கிற ரசிகர்களிடமும் சம்மதமாய், எந்தவிதயாய் பிரதி பலித்து வளரும் என்பதைக் கணக்கிட்டுத் தான் நாடகத்தின் வெற்றி தோல்வியை கணக்கிடக்கூடும்.

கேள்வி : கதாபாத்திரத்தை மேடையேற்றும் போது கவனிக்க வேண்டிய உத்தி என்ன?

தோப்பில் பாஸி : வளர்ச்சியுள்ள கதாபாத்திரங்களைப் படையுங்கள். வளரும் தன்மையுள்ள கதாபாத்திரங்களே நாடகம் பூர்த்தியுற உதவுவார்கள்.

ஒவ்வொரு கதாபாத்திரமும் அவையவை பிரதிநித்வப்படுத்துகிற ரஸத்தை வெளிப்படுத்தத் தக்க தனித்தன்மையும் குண பூரணமும் வியக்தித் தன்மையும் பாத்திரங்களில் தோன்ற வைக்குமாறு சித்தரியுங்கள். கதாபாத்திரங்களின் உள்வளர்ச்சியான உயற்சிக்கு உதவுமாறு பாத்திரங்களின் வெளியரங்கான நடவடிக்கைகள் அனுசரணையாய் அமைய வேண்டும். இதுவே நாடக கதாபாத்திரங்களின் மேடை எழுத்து—உத்தி.

கேள்வி: நாடகச் சோதனை—பரிட்சார்த்த நாடகங்கள் என்று சமீப காலங்களில் பெரிதும் பேசப்படும் ஓசை எங்கும் கேட்கப்படுகிறதே, சோதனை என்பது நாடக வெளிப்பாடான ''பாவத்தில்'' இருக்க வேண்டுமா அல்லது நாடக ரூபத்தில் (உருவத்தில்) வடிவத்தில் அமைய வேண்டுமா?

தோப்பில்பாஸி: பரிசோதனை நாடகம் உருவத்திலும் பாவ வெளிப்பாட்டிலும் தான் மேன்மையுற அமைய வேண்டும். பாவமும் உருவமும் இரண்டும் வரம்பிட்டு ஒன்றும் சொல்ல முடியாது. இரண்டையும் பிரித்து வைக்கவும் முடியாது. இரண்டுமே ஒன்றுதானே. நாடகத்தின் உருவமும் பாவமும் இப்படித்தான் பந்தப்பட்டுக் கிடக்கின்றன. ஒன்றையொன்று தாவிப் பிடித்துத் தனதாக்கிக் கொள்ளும் கலை!

கேள்வி: நாடகத்தின் மூல வித்து மனதில் தோன்றி விட்டால் நாடகத்தின் கதா ரூபம் உருவாகி மனதில் எழுந்து விடுமா அல்லது கதாபாத்திரங்களை உருவாக்கிய பின்னர்தான் ஆலோசித்து தீர்மானிக்க வேண்டுமா?

தோப்பில்பாஸி: என்னைப் பொறுத்தவரை எந்த விஷயத்தைப் பற்றித்தான் நான் எழுத வேண்டும் என்று தீர்மானிப்பதுதான் முதல். அது சரியாகி விட்டால் எதை ''எழுத வேண்டும் என்பதே'' எப்படி எழுத வேண்டும் என்பதை தீர்மானிக்கிறது. இவைகளுக்கு உதவுகிற வகையில் நாடகத்தின் கதா ரூபம் உண்டாகி விடுகிறது. இதற்கேற்றபடி இக்கதைக்குள் ஏற்படுதத வேண்டிய கதாபாத்திரங்களை அதுவே நிர்ணயித்து உருவாக்குகின்றது. மனம் இதையே தியானிக்கிறது. அதனால் இந்த கதாபாத்திரங்கள் காண்பவர் மனதில் உள்ளே பதியத்தக்க பாத்திர வர்ணனையும் குணச் சித்திரமும் என் குறிக்கோளை ஆணித்தரமாய் பதிய வைக்கும் நாடக தன்மையும் என் நாடகத்துக்குக் கிடைத்திருக்கிறது. இப்படித்தான் என் நாடக சங்கல்பம் சாத்தியமாகிறது.

கேள்வி: நாடகம் எழுத நீங்கள் எடுத்துக் கொள்ளும் கருத்து நாடகம் உருவம் பெற நீங்கள் எடுத்துக் கொள்ளும் மூலக் காரணம் என்பதை எப்படி கண்டு பிடித்தீர்கள்?

தோப்பில்பாஸி: எனக்கு எழுச்சி தரும் சமூதாய பிரச்னைகள் என் கருத்தாக்கங்களாகின்றன. எனது நாடக குழுவிற்க்கு ஒரு நாடகம் தர வேண்டும் என்னும் கட்டாயம் ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றி நானும் என் பேச்சை உலகுக்கு வைத்துவிட வேண்டும் என்கிற துடிப்பும்தான் காரணம் மூலமாய் இருக்கிறது நாடகத்துக்கு.

கேள்வி: உங்கள் தனித்துவம், வியக்தி தன்மையும் உங்களது சமூக அரசியல் சிந்தனை போக்குகளும் உங்கள் நாடகத்தில் நுழைந்து விடுவதை அனுமதிக்க போகிறீர்கள்?

தோப்பில்பாஸி: ஆம்! அதுவும் தன் இயல்பாய் கலக்கின்றன. நேரடியாகவும், மறைமுகமாகவும் என் நாடகத்தில் வெளிப்படுகின்றன.

கேள்வி: நடிக. நடிகையர் விஷயத்தில் மலையாள நாடக மேடை வறுமை உள்ளதாய் எண்ணுகிறீர்களா?

தோப்பில்பாஸி: நாம் அதில் தனவந்தர்களே. மலையாளத்தில் மிகச் சிறந்த நடிக, நடிகைகள் இருந்து வருவது கண் கூடு.

கேள்வி: நடிப்பு கலையை வளர்ச்சியுறச் செய்ய நாடக நடிப்பு இயக்கம். (பற்றி) ஒன்று அவசியம் என்று எண்ணுகிறீர்களா?

தோப்பில்பாஸி: நிச்சயம் வேண்டும். இது இனி அவசியம் வங்காளம் இந்த துறையில் முன்னனியில் நிற்கிறது அந்த மாநில அரசின் பார்வையிலேயே சங்கீத நாடக அகாதமியின் கீழ் ஒரு நாடகப் பள்ளி (நடிப்பு துறைக்காக) மட்டும் நடத்தப்படுகிறது. அங்கே எப்படி நடத்தப்படுகிறது என்று அறிய எனக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. நடிகர்களையும் நடிகைகளையும் முதன் முதலில் சரீர சாத்திரம்—உடற்பயிற்சி உடலடிக்கலை ஆகியவைகளைக் கற்பிக்கிறார்கள்—அடுத்ததாக முகத்தின் அனாட்டமி (முகத்தின் அமைப்பும், மாற்றங்களும்) கற்பிக்கிறார்கள் கண்களின் சலனம்—அசைவுகள் முகத்தின் தசைகளின் இறுக்கம்—மற்றும் தளர்த்தல்—அதனால் முகத்தில் தோன்றும் பாவ பேத மாறுதல்கள் என்று இப்படித் தொடங்கி சப்தங்களை குரலில் எழுப்பி கனம்—மலினம்—மிச்சம் என குரலில் பயிற்சி செய்வது வரை எல்லாவிதமான படிப்பையும் இங்கே கற்று தருவது கண்டேன். இதன் பலன் வங்காளி ஸ்டேஜ் மற்றும் வங்க திரைப்பட துறையிலும் நடிக நடிகர்களிடையில் பெறும் மாறுதலான வளர்ச்சியும் நான் காண முடிந்தது. நமது கேரளத்திலும் இது போன்ற நடிப்புக் கல்லூரி நமக்கு வேண்டும் என்பது அப்போதே தோன்றிய ஒன்று.

கேள்வி: இன்று வெளிவரும் நாடக விமர்சனங்களைப் பற்றி உங்கள் எண்ணம்?

தோப்பில்பாஸி: நாடக இலக்கியத்தை பொறுத்த வரையிலும் விமர்சனம் என்பது முன்னே செல்ல வேண்டிய ஒன்றாகவே இருக்க வேண்டும். நிருபர்கள் விமர்சகர்களும், முன், வரிசையில் இருந்து நாடகம் காணவும் விமர்சனத்தை அடுத்து புரியவும் வேண்டும். விமர்சகன்—கலைஞனாகவும்—அறிஞனாகவும் இருக்க வேண்டும். அப்போதுதான் ஆய்வு கலைக்கும் பயன் தருமாறு விமர்சனம் படிப்பினை உள்ளதாகவும் அமையும். நமது நாடக விமர்சன கலை இன்னமும் சக்தி மிக்கதாய் வெளிப்பட வேண்டும.

கேள்வி: அடிப்படை தத்துவம் இல்லாமல் எழுதப்படும் நாடகங்களில் கலைத் தன்மை குறைந்து விடுமல்லவா?

தோப்பில்பாஸி: அடிப்படை மூல்யம் இல்லாமல் ஒருவராலும் ஒரு காலத்திலும் நாடகம் எழுதவே முடியாது. ஆனால் எங்கிருந்தோ வந்து விடுகிற ஒரு ஆத்மீயம் மூலம் நாடக ஆசிரியனை துளைத்து உள் நுழைந்து கவிஞனை எழுப்பி விடுகிறது என்று சொல்லப்படுவதனை நான் நம்ப தயாராய் இல்லை. கலைத்துவம் என்பது வாழ்வில் கலந்து கிடக்கும் நிஜம்தான்.

கேள்வி: ஒரு காலை நாடக மேடையிலும் மற்றொரு காலை சினிமா அரங்கிலுமாய் வைத்து கொண்டிருக்கும் நீங்கள் நாடகத்தை விட்டு விடுவீர்களா என்ன?

தோப்பில்பாஸி: நாடகமும், சினிமாவும் வேறு வேறு அரங்குகள்தான் என்று நான் எண்ணவில்லை. ஒன்று நிழலும் ஒளியும். இன்னொன்று அதன் நேர் வடிவம். அவ்வளவுதான். இரண்டையும் எதிரிகள் என்று எண்ணும் பண்டிதத்துவம் எனக்கில்லை, இரண்டு கல்யாணம் செய்து கொண்ட ஒருவனது அவஸ்தை எனக்கு எப்போதும் நேராது. இரண்டையும் ஒரு நோக்கில் வளர்க்க வேண்டிய காலம் இது. ஒன்றினை ஒன்று போஷிக்கும் வளர்பிக்கும். நானும், எனது பணியை செய்வேன்.

தமிழாக்கம் : தஞ்சை பிரகாஷ்

# மந்திரக்கோலின் மறுமுனை

ஆசிரியர் : பி.எம். தாஜ் தமிழில் : ச. விஷ்ணுதாசன்.

"ஒரு நாள் என்றோ ஒரு நாள், யாரோ ஒரு மந்திரவாதியும் அவனது குழுவும் இங்கு இந்த அரங்கத்திற்கு வந்தனர் என்று ஒரு கதை உண்டு." என்ற அறிவிப்பிற்கடுத்து நாடகம் தொடங்குகின்றது. தொடங்கும்பொழுது. நீங்கள்—பார்வையாளர்கள் காண்பது சூன்யமான ஒரு வெளி. வெளிச்சம் வரும்பொழுது அவர்களின் முன் தோன்றுகின்றனர் பார்வை பறிக்கப்பட்ட ஒரு குழு. அக்குழுவை விலக்கிக் கொண்டு பார்வையுடைய மத்திரவாதியும், அவனோடு ஒரு நாயும், குழுவிலிருந்து வேறுபடுத்தத்தப்பட்டவனாக கொட்டடிப்பவனும் (நந்தன்). அதே நிலையில் பெண்ணும் (அனுராதா) ஆகிய இவர்கள் இருக்கின்றனர். இவர்கள் அனைவரும் தளர்வடைந்துள்ளனர்.

மந்திரவாதி: இந்த எடத்திலேயே கூடாரம் அடிக்கலாம். வளமையான மண்ணு. தெளிஞ்சி ஓடற அருவி. என்னோட செயல்களுக்கு எல்லா விதத்திலும் பொருத்தமான இடம்.

(குழு துள்ளி எழுந்து நிற்கின்றது. இருந்தாலும் பார்வை இல்லை. எனவே எங்கே போவது என்று தெரியமல் தத்தளிக்கின்றனர். மந்திரவாதி சிரிக்கின்றான்.)

மந்திரவாதி : பாருங்க!

குழு : எங்கே?

மந்திரவாதி : இதோ இங்கே, இங்கேதான்.

**(மெதுவாக அவர்கள் அவன் பக்கமாகக் திரும்புகின்றனர். மந்திவாதி அவர்களைச் சுற்றி வந்து, வெளி உலகை ஒரு தரம் நோட்டமிடுகிறான்.)**

**மந்திரவாதி: இந்த இடமே பாதுகாப்பானது. எனவே, உங்களுக்கெல்லாம் பார்வையைத் திருப்பி அளிக்கின்றேன்.**

**(புதிய ஒளியை ஏற்றுக்கொள்ள இயலாத அவர்கள் தடுமாறிக் கொண்டிருக்கும் பொழுது. மந்திரவாதி உரத்த குரலில்......)**

**மந்திரவாதி: கூடாரம் உயரட்டும்!!**

ஆர்வத்தோடும் மகிழ்ச்சியோடும் குழு கூடாரம் அடிக்க ஓடுகின்றனர். குழி தோண்டி...... கயிறுகளைக் கட்டி...... கம்பங்களைத் தூக்கி நிறுத்தி—அதோ கூடாரம் எழுந்து விட்டது. இது அனைத்தும் முடிந்ததும். குழு அடுத்த உத்தர விற்காக காத்திருப்பதுபோல் நிற்கின்றது. மந்திரவாதி எல்லாம் திருப்தியாக இருக் கின்றதா எனப் பார்வையிடுகிறான்.)

(மந்திரவாதி: எனக்குத் தூங்க நேரமாச்சு.

குழு தூங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்கின்றது. அனுராதா தாலாட்டுப் பாடுகின்றாள். நந்தன் தாலாட்டிற்கேற்பத் தாளம் போடுகின்கிறான். தற்போது மந்திரவாதி தூங்கிக்கொண்டிருக்கின்றான். பாட்டு பாடிய படியே, இருக்கும் இடத்தையே மறந்தவர்களாய் அனுராதாவும் அவளுக்குப்பின் நந்தனும் கூடாரத்திற்து வெளியே வருகின்றனர். திடீரெனப் பாட்டை நிறுத்திவிட்டு அவள் பார்வையாளரை பார்த்தபடி நின்றுகொண்டிருக் கின்றாள்.)

நந்தன்: அனுராதா.........இதென்ன கதை? (அவள் அதை கவனித்ததாகத் தெரியவில்லை எனவே, நந்தன் கொட்டைக் கொட்டி கூப்பிடுகிறான்.) என்ன இன்னைக்கு ஒரு மாதிரியா புதுக்களையா இருக்க?

அனுராதா: [பார்வையாளரைப் பார்த்தபடியே...] அற்புதம்!
நந்தன் :எதனால்?

அனுராதா: உன்னால இத பாக்கமுடியுதா நந்தா?

(அவள் பார்வையாளரைக் காட்டுகின்றாள். அதைப் பார்த்த நந்தனும் ஆச்சரியமடைந்தவனாகிறான் நாம மட்டுந்தான் பூமியிலிருக்கோம்னு அவரு சொன்னாரு? அப்படீன்னா இவுங்கள்லாம் யாரு......? அதோ......... என்னமாதிரியே...

நந்தன்: என்ன மாதிரியுந்தான். ஒருத்தங்க மட்டுமில்லை. நெறைய பேரு...... நம்மோட இதே கோலத்துல, இதே பாவனையில...தோழர்களே...... நீங்களும் மனுசங்கதானே?

அனுராதா: ஐயோ......[மெதுவான குரலில்] கொஞ்சம் மெதுவாப் பேசேன். (மந்திரவாதி இருக்கும் திசையைக் காட்டி) அங்கேயும் கேக்கும். சில சமயம் அந்த ஆளு நம்மள விளையாட்டுக்காக செஞ்ச மாயமாக்கூட இருக்கும். மாட்டிக்கிடக்கூடாது.

நந்தன்: ஒரு வேள அப்படித்தான் இருக்குமோ?......இப்பதானே நம்மோட கணகட்ட அவுத்தது.

அனுராதா: அவுத்த மாதிரி தோனுச்சின்னா?

நந்தன்: அப்படீன்னா நீ ஒன்னு செய். அந்த ஆளு கேட்டுகிட்டிருக்கானான்னு ஒளிஞ்சிருந்து பாரு. நா அவங்களோட ஒரு ரகசியத்தத் தெரிஞ்சிக் கிறேன். ம......நல்ல பொண்ணு இல்ல......

அனுராதா: ம......எனக்கு பயமா இருக்கு.

நந்தன்: பயந்நுட்டியா......அரண்டவங்கண்ணுக்கு இருண்டதொல்லாம் பேய்ன்னு சொல்ற மாதிரி பயத்தோடவேப் போய பாத்துக்கனும். (தள்ளுகிறான்) போம்மா.

அனுராதா: (பார்வையாளரைப் பார்த்து) ஒன்னு மட்டும் சொல்லுங்க. நாம எல்லோரும் ஒரே மாதிரியா?

மந்திரவாதி: (அனுராதாவின் பேச்சைக் கேட்டு விட்டவனாய் உரத்த குரலில், எங்க......எங்க...எங்க என்னோட தாலாட்டு எங்க? (பயந்து நடு நடுங்கி ஒருவரோடொருவர் சேர்ந்து நிற்கின்ற நந்தனும் அனுராதாவும் அவனின் விரலுக்குக் கட்டுப்பட்டவர்களாய் அவனது காலடியில் வந்து விழுகின்றனர்.)

நந்தன்: இந்த கண்ணு என்னை அனுசரிச்சு போகமாட்டேங்குது.

மந்திரவாதி: விரலை நீட்டினால் கண்களைக் கண்ணாடித் துண்டுகளாய் உடைத்துவிடும் சக்திபடைத்தவன் நான். அனுசரிச்சு நடக்கனும்.

குழு: மன்னிக்கனும். இனிமேலும் அப்படிச் செய்ய மாட்டோம்.

மந்திரவாதி: உண்மையாகத்தானே?

குழு: உண்மையாக. நாங்கள் மனுசங்கன்னு சொல்ற மாதிரியே. உண்மையா.

(குழு முட்டிபோட்டு இருக்கின்றனர். பழைய நிலைக்கு அவர்கள் திரும்பும் போது நந்தனும் அனுராதாவும் ஏதோ ஒரு ஆத்ம உணர்வினால் ஒன்றுபட்டவர்களாய் இணைகின்றனர்.)

மந்திரவாதி: அப்படியானால், விடியும் வரை நீங்கள் சலனமில்லாமல் இருங்கள்!

(அவர்கள் அந்த நிலையிலேயே சலனமற்றிருக்கின்றனர். மந்திரவாதியின் தூக்கம் தொடருகிறது. நாய் மட்டும் முன்னோக்கி வந்து சோம்பல் முறித்து, மங்கிய வெளிச்சத்தைக் கண்டு குரைக்கின்றது. மந்திரவாதி எழுகின்றான். நந்தனுக்கும் அனுராதாவுக்கும் இடையில் சென்று கை தட்டி அவர்களின் சலனமற்ற நிலையை உடைக்கின்றான்.)

மந்திரவாதி: சாப்பாட்டுக்கு கேரமாச்சு. வந்து உக்காருங்க.........ஹூம்......... தயங்காதீங்க...... பல்லு தேய்க்கறது, குளிக்கறது, வெளியே போறது எல்லாம் முடிஞ்சிட்டுது.

(அவர்கள் உற்சாகத்தோடு சாப்பாட்டுக்காக உட்காருகின்றனர். பின் மந்திரவாதி சொல்வதை அனுசரித்து சாப்பிடுவதுபோல பாவனை செய்கின்றனர்)

தலவாழை இல போட்டு.........நடுவுல சோறு போட்டு, நெய், சாம்பார், பால் பாயசம் (சிரிக்கின்றான்) என்ன போதுமா? (சிரிக்கின்றான்) எல்லாத்தையும் ஒன்னா சேத்து கொழச்சு உருட்டுங்க. சின்ன உருண்டை, பெரிய உருண்டை......என்ன வயத்துக்குள்ள போவத் தயாரா? ம்...... தொண்டைக் குள்ள உருளட்டும். (சிரிக்கிறான்) அப்புறம் அந்தப் பால் மொந்தைய வாயில கவுத்துக்குங்க, க்ளுக்......க்ளுக்......க்ளுக்...... (சிரிக்கிறான்)என்ன திருப்தியா? (குழு திருப்தி என்று தலையாட்டுகின்றது.) சரி, இனி நான் திரும்பிவர்றவரைக் கும் உங்களுக்கெல்லாம் ஓய்வு.

(மந்திரவாதி மறைகிறான். நாயின் கடுமையான காவல். நந்தன்—கொட்டைக் கொட்டிக்கொண்டே திரிகின்றான். அவன் பின்னால் சென்ற அனுராதா அவனைத் தடுத்து நிறுத்துவதற்காக அவன் தோள்மீது கையை வைக்கின்றாள். நந்தன் அந்தக் கையைத் திரும்பிப் பார்க்கின்றான்.)

நந்தன்: அனுராதாவா?......

அனுராதா: நந்தா நாம நேத்துப் பாத்ததெல்லாம் கனவா இருக்குமோ?

நந்தன்: நானும் அப்படிதான் நெனைக்கிறேன்.

அனுராதா: கனவுதானோ?

நந்தன்: கனவோ? நனவோ? அது அவ்வளவு நல்லதல்ல. அதப் பார்த்தது னாலதானே நாம தண்டிக்கப்பட்டோம்......?

அனுராதா: எப்படி இருந்தாலும் அது இன்னும் ஏங் கண்ணிலேயே அப்படியே இருக்கு...

நந்தன்: அனுராதா......

அனுராதா: சில சமயம் நாம நேத்துப் பாத்தது பொய்யா இருந்துச்சின்னா?

நந்தன்: நீ வேகமாப் போ......தொறந்த கண்ணோட இங்க நாய் காவல் காத்துக்கிட்டிருக்கு. அவனுக்கு இப்பவே நம்மமேல சந்தேகம் ஏற்பட்டி ருக்கும்......போ......

(அவர்கள் பயப்படுவது போலவே நாயும் பயந்து கொண்டிருக்கின்றது. அப்பயத்தோடவே அது குரைத்துக்கொண்டே அவர்களுக்கிடையில் வருகின்றது. தப்பிக்கின்ற முயற்சியில் அவர்களிருவரும் ஒருவரையொருவர் கைகளைப் பிடித்துக்கொண்டே போகின்றனர். நந்தனுடைய கை மெதுவாக உயர்ந்து அனுராதாவின் தலையைத் தொட்டுத் தடவுகின்றது. நாய் குரைப் பதையே மறந்து அவர்களின் செய்கையையே பார்த்துக்கொண்டிருக்கின்றது. பின் போய்விடுகின்றது.)

நந்தன்: அனுராதா.........

அனுராதா: ம்.........

நந்தன்: எனக்கு உன்னைப் பாக்க ரொம்ப ஆசையாக இருக்கு. கண் கட்டை அவுத்தப்ப, நாம ஒருத்தர ஒருத்தர் அந்நியோந்நியமாப் பாததுக்கிலேன்னு தான் தோனுது.

அனுராதா: எனக்கும்தான்..... அப்படீன்னா......

நந்தன்: அப்படீன்னா......சொல்லும்மா......

அனுராதா: நான் இப்பே உன்னோட முகத்தப்பாக்கறேன்......தெளிவாகவே.

நந்தன்: உண்மையாவா......? எங்க......? உன்னோட விரலு எங்க? அந்த வருடலோடவே ஒரே ஒரு தடவ உன்னை நான் திரும்பியும் பாக்கட்டுமா?

அனுராதா: இதோ......இங்க......

நந்தன்: எங்க......?

(அவர்களிவரும் வேறு வேறு திசைகளில் கைகளை நீட்டுகின்றனர். அவர் களுடைய மனநிலையைக் காட்டுவது போன்று சப்பாத்தி முள்காட்டைக் குழு

தோற்றுவிக்கின்றது. நாயின் குரைப்பு மெதுவான நிலையிலிருந்து வேகமாகின்றது. அந்தத் தாளகதியிலேயே அவர்களுடைய கைகளும் ஒன்று சேர்கின்றன. பின் மந்திரவாதி தோன்றுகின்றான். அரங்கம் முழுவதும் அலங்கோலமாகின்றது.)

மந்திரவாதி: பெண்ணே......கண்ணால் கண்ணீரை வரவச்சிக் கடல உண்டாக்கத்தானே நான் உனக்கு சொல்லிக்கொடுத்தேன்.....இப்ப நீ தலைகீழா அடிய மாத்திப்போடறியா? சொல்லு...ஆம்பளையக் காதலிக்கிற இந்த வித்தைய உனக்கு யாரு சொல்லிக்கொடுத்தது? (உரத்தகுரலில்) சொல்லு?

(அனுராதா பார்வையாளரைச் சுட்டிக் காட்டுகின்றாள்.)

மந்திரவாதி: அப்படியா? ஓஹோ......நீ என்னை ஏமாத்திருக்க இல்லையா......! நீசன், ஆணவக்காரன், தன்னலக்காரன்னு என்னைப் பத்தி அவங்கக்கிட்ட சொல்லியிருப்ப. அப்படீன்னா இதையும் கேட்டுக்க, சிரிப்போட ஒரு முகமும் இல்லாத இந்த உலகம் எவ்வளவு கொடுரமானதுன்னு உங்களுக்குத் தெரியும் இல்லையா...அந்த வேதனைகளுக்கு இந்த இளம் மனசெத் தெறந்துவுடலாமா? அதத்தாங்க இவுங்களால முடியுமா?

குழு: முடியாது......எங்களோட நன்மைக்காகவே இந்தக் கண்கட்டு.

மந்திரவாதி: என் அன்பிற்குரியவளே! உங்களுடைய கால்ல ஒரு முள்ளு குத்தினாலும் அத என்னால சகிச்சிக்க முடியாதே.

குழு: எங்களுக்குத் தெரியும்.

மந்திரவாதி: அப்படீன்னா இனியும் தயங்க வேணாம். நிகழ்ச்சி தொடங்கட்டும்.

(நந்தன் கொட்டுக் கொட்டிக் கொண்டே முன்னரங்கிற்கு வருகிறான். கொட்டினுடைய சுபாவம் அறிவிப்பு நிகழ்ச்சியாக அமைகின்றது.)

நந்தன்: பெரியோர்களே! தாய்மார்களே!

குழு: ஆமா. பெரியோர்களே! தாய்மார்களே!

நந்தன்: யாரும்......யாரும் யாருக்காக வேண்டியும் காத்திருக்கமுடியாத வேகம்.......வேகம்.

குழு: வேகம்......வேகம்......

நந்தன்: உங்களைப் பிரமிப்படையச் செய்யும் மாயா ஜால வித்தைகள்! இதோ உடம்பையெல்லாம் ஒன்னு சேத்து எரிச்சு அரிசியை வேகவைக்கும் சமையல்காரன்......இதோ வளையமே இல்லாம தாண்டக்கூடிய மிடுக்கான அற்புத நாய்......மலையைக்கூட தோளில் தாங்கக் கூடிய சுமைதாங்கி. கடைசியா காதலால் கல்லை பூவாக மாற்றக்கூடிய சின்ன பொண்ணு.

அனுராதா:என்ன......?

நந்தன்: காதலால்......சின்ன பொண்ணு.

அனுராதா: அது, நான் இல்ல. நான் கண்களால் கடல உண்டாக்கறவ.

நந்தன்: சரிதான், கண்களால் கடல உண்டாக்கறவதான்...—ஆமா நான் இத எத்தன தடவக் கொட்டுகொட்டிச் சொல்லியிருக்கேன். ஆனா, இன்னைக்கு மட்டும் ஏன் என்னோட நாக்குத் தடுமாறிச்சு?

அனுராதா: தடுமாறிச்சோ, என்னவோ எனக்கு அதுதான் புடிச்சிருக்கு. எனக்குஅழுகிற வித்தையே வெறுத்துப் போச்சு.

நந்தன்: அனுராதா......இனிமேலும் குழப்பத்த உண்டாக்காத. போ...... (பார்வையாளரைப் பார்த்து) கண்ணத் தெறங்க, இதோ மந்திரவாதி அவதரிக்கிறார்.

குழு: எங்களின் உடலும் உயிருமான மந்திரவாதி இதோ.

(குழுவிலிருந்து மந்திரசக்தி பெற்றவனாக, மந்திரவாதி புன்சிரிப்போடு பார்வையாளரை நோக்கி வருகின்றான் )

மந்திரவாதி: நிகழ்ச்சியின் முதலாவது அம்சம். மனுசனை நாயாக்குவது.

குழு: ஐயோ......!!

மந்திரவாதி: தயாராக இருங்கள். உங்களில் ஒருவன் இதோ நாயாகப் பேசிறான்.

(மந்திரவாதி ஒதுங்கும்போது. தங்களில் யார் என்று தெரியாமல் குழு பைத்திய நிலையை அடைகின்றது. அவர்களுக்குள்ளே ஒவ்வொருவரையும் பயப்படுத்துவதும், அவர்கள் தானே பயப்படுவதுமாக இருக்கின்றனர். பின் ஒன்றாகச் சேருகின்றனர். மந்திரவாதி தனது தியான நிலையில் இருக்கும் போதே நாயின் குரைப்புச் சத்தம். குழு சிதறித் தனித்தனியாகின்றது. தனித்தனியானவர்கள் நாய்கள் போன்றே நடக்கின்றனர். நாம் நாய் இல்லை என்று பின் உணருகின்றனர். நந்தனே நாய். குழு உறைந்துபோன நிலையில் நாயைப் பார்த்து நிற்கின்றது.)

நாய் (தனக்குள்ளாக): நான் சொல்லுவது இதுதான். எஜமானன் எங்கிட்ட ஒரு அன்பும் கிடையாது. எப்படி ஒரு மனுசனோட கோலத்த மாத்தறது...... அப்படீன்னா பின்ன ஏன் அவள ஒரு பொட்டை நாயா மாத்த மாட்டேங் கிறாரு?

(மந்திரவாதி நந்தனுக்குப் பக்கத்தில் சென்று அன்போடு அவனைத் தடவுவதும். நாயின் கழுத்தில் சங்கிலியைக் கட்டுவது போலவும் செய்கின்றான். மெதுவானத் தேம்பலிலிருந்து பின் உயர்ந்துவரும் அனுராதாவினுடைய அழுகையைக் கேட்டு அவன் தலைநிமிர்கிறான். அனுராதா அழுகையை மட்டுப்படுத்துகின்றாள். மந்திரவாதியும் குழுவும் அந்த இடத்தை விட்டுப் போகின்றனர். கழுத்தில் சங்கிலியால் பூட்டப்பட்ட நந்தன் மொத்தத்தில் நிராயுதபாணியாகின்றான். அவனுடைய கொட்டுவாத்தியம். அனாதையாய்க் கிடக்கின்றது. அனுராதா அதை எடுத்துக்கொண்டு அவனருகில் செல்கின்றாள்.)

அனுராதா: நந்தா எப்படி ஆனாலும் எனக்கு உன்மைக் காதலிக்கவே ஆசை. (அவள் கொட்டு வாத்தியத்தை அவன் முன் வைத்துவிட்டு அவனை அன்போடு தடவி விடுகின்றாள்.)

அனுராதா: அழுகாத நந்தா......என்னைக்காவது நமக்கு நல்லகாலம் பொறக்கும்.

(மந்திரவாதி திரும்பி வருகின்றான். அனுராதா எழுந்து தள்ளி நிற்கின்றசள். அவன் நீட்டிய கைகளில் கொட்டு வாத்தியத்தைத் தருகின்றாள். அதில் அவன் மெதுவாகக் கொட்டிக்கொண்டே சிரிக்கின்றான்)

மந்திரவாதி: நான் என்ன முட்டாளா? இவங்களோட சொகத்த மட்டும் பார்த்து என் சொந்த வேலையையே மறந்துட்டேனே. இனிமே யாரு இதக் கொட்டுவா?

(தள்ளி நிற்கின்ற நாயைப்(நந்தனில்லை) பார்த்து அதன் பக்கத்தில் சென்று அதைக் கொஞ்சுகின்றான்.)

மந்திரவாதி: ஏய், நான் உன்னை மனுசனாக்கட்டுமா?

(நாய் பயந்து ஓடுகின்றது.) இங்க பக்கத்துல வா......

(அவன் தன் விரலினைச் சுட்டிக்காட்டி நந்தனுக்குப் பக்கத்தில் செல்ல வைக்கின்றான். இரண்டு நாய்களும் பீதியோடு அவனைப் பார்த்து நிற்க, அவன் மாயவித்தைகளைக் காட்டுகின்றான் அதற்கிடையில் நாய் மனிதனாகி நந்தன்மேல் விழுந்து கிடக்கின்றான். நந்தனைப் பார்க்கின்றான். நந்தன் மனிதனாக மாறிய சுந்தரனைக் குரைத்துக்கொண்டே விரட்டுகின்றான். சுந்தரன் பயந்து பின்னோக்கிச் செல்கின்றான்.)

சுந்தரன்: போ......நாயே......போ...... (என்று கூறிக்கொண்டே அவன் நந்தனை அடிக்கச் செல்லும்பொழுது அனுராதா இடைபட்டு நந்தனைச் சாந்தப்படுத்துகின்றாள். சுந்தரன் துக்கத்தோடு மந்திரவாதியிடம் சென்று....)

சுந்தரன்: நான் என்ன தப்பு செஞ்சேன்?......

மந்திரவாதி: உன்னோட மட்டுத்தான் எனக்கு அன்புன்னு தோணிச்சு. எவ்வளவு காலமா நீ ஒரு நாயாகவே காலந்தள்ளுவ?

சுந்தரன்: அப்படீன்னா? அப்பெல்லாம் எனக்கு எச்சிலாவது கிடைக்கும். இனிமே பசிக்கறப்பல்லாம் சாப்பிட்ட மாதிரி நடிக்கனும்.

மந்திவர்தி: என்ன சொன்ன.........!!!

சுந்தரன்: நான் எல்லாத்தையும் பாக்க முடிஞ்சிதில்லியா?

(மந்திரவாதி தனது மந்திர சக்தியை உபயோகித்து கொட்டு வாத்தியத்தை அவனிடம் நீட்டுகிறான். சுந்தரன் எந்தவித உணர்வும் இல்லாதவனாய் அதை வாங்குகின்றான். சுந்தரன் சோர்வடைந்த நிலையில் குழுவையும். கொட்டு வாத்தியத்தையும் பார்க்கிறான்.)

குழு: ஆ......ஐயோ......! இந்த ஆளு பக்கத்திலிருக்கும்போது மூச்சே நின்னுடும் போல இருக்கே ஒரே ஒரு தடவக் கொட்டு ..... (சுந்தரனின் கையறு நிலைமை) எங்களுக்கு இந்த அமைதிய சகிச்சிக்க முடியது...... கொட்டு.

(அமைதியான நிலையில் கொட்டு வாத்தியத்தை மார்போடு சேர்த்தணைத்துக் கொண்டு எல்லோரையும் பார்த்தவாறே நிற்கின்றான் சுந்தரன். குழு அவனைச் சுற்றிக் கூடுகின்றனர்)

குழு: கொட்டு......எங்களால இந்த அமைதியைச் சகிச்சிக்க முடியல...... கொட்டு......

சுந்தரன்: (ஆவேசத்தோடு துள்ளிக் குதித்து) இல்லை...... என்னால இதக் கொட்ட முடியாது.

(குழு மந்திரவாதி கேட்டுவிடுவானோ என்று சங்கடப்படுகின்றது. நந்தன் மெதுவாக சுந்தரனுக்குப் பக்கத்தில் செல்கின்றான்.)

சுந்தரன்: (நந்தனிடம்) உனக்குத் தெரியுமா? இதுல கட்டியிருக்கறது எங்க அம்மாவோட தோலு......

(குழு ஏதோ அதிசயத்தைக் கேட்டுவிட்டவர்களாய் அவனை நோக்கி வருகின்றனர். ஒருவன் பக்கத்தில் சென்று தயக்கத்துடன் அதில் ஒரு கொட்டு கொட்டுகிறான். இதோடு சேர்ந்து நாயும் குரைக்கின்றது. அவன் பயந்து பின்னோக்கிச் செல்கின்றான். மீண்டு இதே போன்று. சுந்தரன் கோபத்தோடு குழுவைப் பார்க்கின்றான்.)

சுந்தரன்: உங்களுக்கு எம்மேல நம்பிக்கை இல்ல இல்லையா? அப்படீன்னா, ஒன்று தெரிஞ்சுக்குங்க. நீங்க எல்லாரும் நாய்ங்கமாதரி கண்ணக்கட்டி நடந்துக்கிட்டிருந்தப்ப, நான் மனுசங்க மாதிரி எல்லாத்தையும் பார்த்துக் கிட்டிருந்தேன். இப்பத்தான் எனக்கு எல்லாம் ஞாபகத்துக்கு வருது. பேசறதுக்கு எனக்கு என்னோட நாக்குக் கெடச்சிருக்கு. கேக்கறீங்களா...? செத்துப்போன என் அம்மாவோட தோலு இது! அந்த ஆளு கட்டிக்கிட்டிருந்தப்ப நான் பார்த்துக்கிட்டே பக்கத்துல நின்னுக்கிட்டிருந்தேன். என்னால இதக் கொட்ட முடியுமா?

குழு: கொட்ட முடியுமோ?

சுந்தரன்: இல்ல..... ஒரு அம்மாவோட நெஞ்சில ஒரு மகனால உதைக்க முடியாது.

(சுந்தரன் சொல்லிக்கொண்டே கொட்டு வாத்தியத்தை தூக்கி எறியப்போகும் போது, அவன் முன் தோன்றிய மந்திரவாதியின் உயர்ந்த கையைப்பார்த்து உறைந்துபோன நிலையில் நிற்கின்றான்.)

மந்திரவாதி: (பார்வையாளரைப் பார்த்து) நண்பர்களே...... நிகழ்ச்சியின் அடுத்ததாக. ஜீவனுள்ள மனுசனின் நாக்கை அறுப்பது.

சுந்தரன்: இல்லை......உண்மையைச் சொல்ல எனக்கு என்னோட நாக்கு வேணும்.

மத்திரவாதி: (கொட்டு வாத்தியத்தைக் காட்டி) அத இங்கக் கொடு.....!

(உபகரணத்தைத் தர மறுக்கிறான். அதை அனுசரித்து சுந்தரன் பின்னோக்கிச் சென்றவாறே தப்பிக்க முயற்சிக்கின்றான். அவனைத் தடுத்து நிறுத்துவது போன்று குழுவில் அனைவரும் ஒரே மாதிரியாகக் கையை நீட்டுகின்றனர் அவன் அவர்களை எதிர்க்க முடியாது நிற்கின்றான். குழு சுந்தரனிடமிருந்து வாங்கியக் கொட்டு வாத்தியத்தை மந்திரவாதியிடம் தருகின்றது. அவன் அதை வாங்கி பைத்தியமான ஆவேசத்தோடு கொட்டுகின்றான். அதை அனுசரித்து ஆடுகின்ற குழு, நாக்கை அறுக்கும் மந்திரத்தோடு சுந்தரனைச் சுற்றி வளைக் கின்றது. குழுவினிடையே தற்போது சுந்தரன் பேச முடியாதவனாய் நிற்கினறான். மந்திரவாதி சுந்தரனுக்குப் பக்கத்தில் சென்று கொட்டு வாத்தி யத்தைத் தருகின்றான். இயந்திர நிலையில் அவன் அதை வாங்கிக்கொள் கின்றான். தற்போது குழு கலைந்து களத்தைவிட்டு வெளியேறுகின்றது

மந்திரவாதியும் மறைகிறான். அனுராதா சுந்தரனுக்குப் பக்கத்தில் சொல்கின்றாள்.)

அனுராதா: அன்ப சாகடிக்க முடியுமா......? உனக்குக் கண்பார்வை இருந்துதே. எல்லாத்தையும் பாக்க முடிஞ்சிதே...... அன்ப நசுக்க முடியுமா?

(சுந்தரன் 'முடியாது' என்ற தொனியில் கொட்டுகிறான்.)

அனுராதா: முடியாது......?

(சுந்தரன் 'முடியாது' 'முடியாது' என்ற தொனியில் திரும்பவும் கொட்டுகிறான்.)

குழு: நம்மை போலவே வேற மனுசங்களும் இருக்காங்களா?

(சுந்தரன் 'இருக்கின்றார்கள்' என்ற தொனியில் கொட்டுகின்றான்.)

அனுராதா: இருக்காங்களா???!

(சுந்தரன் இருக்கின்றார்கள் என்று கொட்டுகின்றான்.)

குழு: எங்க?

அனுராதா: எனக்குத் தெரியும், நான் நேத்து பார்த்தேன்.

குழு: எங்களாலேயும் பாக்க முடியுமா?

அனுராதா: கண்ணு கட்ட அவுத்தா பாக்கலாம்.

(அனுராதா பார்வையாளரைக் குழுவிற்கு சுட்டிக் காட்டுகின்றாள். குழுவும் தற்போது பார்வையாளரைப் பார்க்கின்றது. குழு 'ஆச்சரியம்' என்று கூறிக் கொண்டே ஒருவரோடொருவர் கைகோர்த்து நிற்கின்றனர்.)

குழு: நாம எல்லோரும் ஒன்னு.

(திடீரென அவர்கள் பார்வை இழந்தவர்களாய் மாறுகின்றனர். ஒன்றையும் அவர்களால் தற்போது பார்க்க முடியவில்லை; தளர்ந்த நிலையில் பார்வை கிடைக்காதா என்ற ஏக்கத்துடன் தாடுமாறிக்கொண்டே, ஒருவரையொருவர் தடவிப் பார்த்து ஒன்று சேருகின்றனர். அனுராதா மட்டும் பார்வையுடையவளாய்த் திடமாக நிற்கின்றாள். அவள் ஒரு தீர்மானத்துடன் நந்தனுக்குப் பக்கத்தில் சென்று)

அனுராதா: இனி ஓடுக்கப்பட்ட இந்த இடத்துல இருந்தா......?வர்றது வரட்டும், வா நந்தா நாம ஓடி தப்பிக்கலாம் வா......

(அவன் அவனை ஒரு சுதந்திரமானவனாக மாற்றுகிறாள். இருவரும் தப்பிக்கும் முயற்சியில், குழுவும் அவர்களைச் சூழ்ந்து கொள்கின்றது.

அனுராதா: (உதட்டின்மேல் விரலை வைத்து தாழ்வான குரலில்) சத்தம் போடாதீங்க........

(அரங்கை விட்டு நந்தனும் அனுராதாவும் போகின்றனர். குழுவும் அவர்கள் பின்னே செல்கின்றது. சுந்தரன் பார்வையாளரை நோக்கித் திரும்புகிறான். குழு திரும்பி வந்து சுந்தரனிடம்)

குழு: அவர்கள் எங்கே போனார்கள்?

(சுந்தரன் புன் சிரிப்போடு கொட்டத் தொடங்குகின்றான் அந்தக் கொட்டு துரித தாளகதியில் மகிழ்ச்சியூட்டக் கூடியதாக அமைகின்றது. அவன் அவர்களுக்கிடையில் கொட்டிக்கொண்டே செல்கின்றான். குழுவின் ஒரு பிரிவு அவனருகில் சென்று, அதைத் தடுத்து நிறுத்துகின்றது.)

குழுவின் ஒரு பிரிவு: ஒன்னு மட்டும் சொல்லு. வெளி உலகத்திலே என்ன இருக்கு......? மனுசங்கள்லாம் என்ன செய்யறாங்க?

(சுந்தரனுடைய கொட்டு நின்றவுடேன ஒரு சிறிய குடிசை மேடையில் தெரிகிறது. அங்கே அனுராதா சமையல் செய்துகொண்டிருக்கின்றாள். நந்தன் வேலை முடித்து திரும்பி வருகின்றாள்.)

நந்தன்: அனுராதா! இவன் வளரனும்.........நாளைக்கு......ஏண்டி ஏதாவது உருவாயிருக்கா?

அனுராதா: ஐய...... நெனப்புதான். இந்த ஆளுக்கு சுமோ இதே வேலதான்.

நந்தன்: கேட்டியா அனுராதா, இவனப் பத்தி நான் என்னெல்லாம் கனவு கண்டிருக்கேன்னு உனக்குத் தெரியுமா?

அனுராதா: ம்... கனவு இவனபத்தி மட்டுந்தான் இல்லியா. இவன் வளந்த பிறகு என்ன மாதிரியான அறிவு, என்னா ஒரு வசீகரம்?

நந்தன்: ஐய்யய்யே...... இவன் என்ன மூத்தரத்தக்ல குளிப்பாட்டிட்டானே. (அனுராதா சிரிக்கின்றாள்) வாடி...... நாம கொஞ்சநேரம் காத்தாட அந்த ஆத்தங்கரையில போய் உக்காரலாம்.

(அவர்களிருவரும் சிரித்துக்கொண்டே தோளோடு தோள் சேர்ந்து அரங்கை விட்டு வெளியேறுகின்றனர் குழுவும் அவர்களோடு சேர்ந்து சிரிக்கின்றது. இச்சிரிப்பை அமைதியாக்கும் நிலையில் நந்தன் வந்து விழுகின்றான்.)

குழு : அனுராதா எங்க?

(உள்ளே அனுராதாவின் ஓலம் குழு அத்திசையை நோக்கிச் செல்ல முயற்சித்து முடியவில்லை. எனவே, இத்தவிப்பிலேயே அவர்கள் ஒன்று சேருகின்றனர். நந்தன் எழுந்து தோழமையோடு அவர்களைப் பார்த்துக் கொண்டே செல்கிறான். அவர்கள் ஏதும் செய்ய இயலாத நிலையில் ஈஸ்வர பிரார்த்தனையில் ஈடுபடுகின்றனர். பிரார்த்தனையின் பலம் என்ன? என்ற நிலையில்

நந்தனுக்கு நேராக மேலிருந்து தூக்குக் கயிறு ஒன்று வருகின்றது. ஜடமான நிலையில் வேறு என்ன செய்வதென்று தெரியாமல் அவன் தூக்கிலேறத் தயாராகின்றான். குழு திடீரென எழுந்து அவனைச் சூழும்பொழுது அவன் இறந்திருக்கின்றான். அவனது உடலை தூக்குக் கயிற்றிலிருந்து அவிழ்த்து தனியே ஓரிடத்தில் கிடத்துகின்றனர். விவரமறிந்த மந்திரவாதியும் அனுராதாவும் ஓடிவருகின்றனர்.)

மந்திரவாதி : (தனக்குள்ளாக) எஜமான அன்பு இல்லாதவன். இந்த நாய்...... நாளைக்கு எனக்குக் காவலிருக்க யாருண்டு?

அனுராதா : ஒரு நிமிஷம் என்னோட கண்கட்ட அவுத்து விடறீங்களா? கடைசியா அந்த முகத்த நான் பாக்கட்டுமா?

மந்திரவாதி : சாவு ரொம்பவும் துக்ககரமானது பெண்ணே. உன்னோட இளகிப்போன மனசால இத தாங்க முடியாது...... ம்... சவத்த மூடுங்க.

(உடலின் மேல் ஒரு குழு விறகுக் கட்டைகளை அடுக்கியது போன்று பாவனை செய்கின்றது.)

மந்திரவாதி: ஜீவன் அடங்கிப்போன சாவக் கண்டு தளர்ந்த உங்களுக்கு இதோ திரும்பவும் புத்துணர்ச்சி. புனர்ஜென்மம் காணுங்கள்.

அனுராதா : வேணாம்......! இனியும் அவரைக் கொடுமை படுத்தாதீங்க.

மத்திரவாதி : நீ காதலிக்கவே அவனை எழுப்புகிறேன்.

அனுராதா : வேணாம்...... வேணாம்...... இந்த வேதனையை நான் தாங்கிக் கிடுவேன். (என்று கூறிக்கொண்டே நிலை குலைந்தவளாய் அவள் ஓர் இடத்தில் ஒதுங்குகின்றாள்.)

மந்திரவாதி : எனக்கு வேணும், அவன அன்போட தடவிவிடவும், கொஞ்சவும் நேரத்தோட என்னக் குரைச்சி எழுப்பிவிடவும்......

(விறகுக் கட்டைகளை விலக்கிக்கொண்டு நந்தன் உயிர்ப்பிக்கின்றான். குழு பயந்து பின்னோக்கிச் செல்கின்றது.)

குழு ஒன்று : என்ன வேலை இது?

மந்திரவாதி : உங்களோட தலைவன் செய்யாதது இந்த பூமியில் ஒன்னுமே யில்லைன்னு நினைச்சிக்குங்க.

குழு இரண்டு : உயிர்மேல உள்ள வெறுப்பாலதானே அவன் செத்தது?

மந்திரவாதி : ஏய், இல்ல, என்னாலேயும் உயிர் கொடுக்க முடியுங்கிறதக் காட்டறதுக்காகவே அவன் செத்தான். அப்படியாடா? (தாழ்ந்த குரலில்) குட்டித் திருடா. இனிமேலும் இந்த மாதிரி முட்டாள்தனம் செய்யாதே.

நந்தன் : சாவோட சுகத்த நான் தெரிஞ்சிகிட்டேன்.

மந்திரவாதி : என்ன? நீ பேசறியா? என்னோட மந்திரம் தப்பாயிட்டுதா? உன்ன நான்......

நந்தன் : நான் இப்போ மிருகமும், மனுசனும் சேர்ந்த மாதிரி இருக்கேன். எனக்கு பாக்கவும், பேசவும் சிந்திக்கவும் அனுராதா...........

அவர்களிருவரும் சந்தோஷத்தால் ஒருவரையொருவர் ஆரத் தழுவிக் கொள்ள வேண்டும் என்றவாறு நெருங்குகின்றனர்.)

மந்திரவாதி : நில். (அவன் நின்ற இடத்திலிருந்து முன்னோக்கிச் செல்ல முடியவில்லை என்றாலும் உடலை வளைத்து அவன் செல்ல முயற்சிக்கின் றான்) எந்த இடத்துல என்னோட மந்தரம் தப்பா போச்சி?

சுந்தரன் அவனது பேச்சைக் கண்டுகொள்ளாதவனாய் தனிமையில் கொட்டு கொட்டிக் கொண்டு முன்னரங்கிற்கு வருகின்றான். அவன் யாரையும் கவனித்ததாகத் தெரியவில்லை. மந்திரவாதி கோபமடைகின்றான்.)

மந்திரவாதி : நிறுத்தடா! நீ என்னோட செயலப் பாத்துப் பரிகாசம் பண்றியா? (சுந்தரன் திரும்பவும் கொட்டுகிறான்) போதும் உன்னோட கொட்டும் குரலையும்.

(மந்திரவாதி கொட்டு வாத்தியத்தைப் பிடுங்கிக் கொள்கின்றான். அனுராதா அவனுக்கருகில் செல்கின்றாள்.)

மந்திரவாதி : நீ இத எடுத்துக்கிட்டு அங்க போய் நில்லு.

(அவள் இயந்திர ரீதியாக கொட்டு வாத்தியத்தை வாங்கிக்கொண்டு அரங்கை விட்டுச் செல்கின்றாள். குழுவின் ஒரு பிரிவு மத்திரவாதியிடம் சென்று)

குழு ஒன்று : (நந்தனைச் சுட்டிக்காட்டி) அவனுக்கு அவளைத் திருப்பிக் கொடு.

மந்திரவாதி : என்னது?

குழு இரண்டு : அவன் இந்த வேதனையில் நிக்கும்போது எங்களால அத சகிக்கமுடியல.

மந்திரவாதி : (நந்தனுக்குப் பக்கத்தில் சென்று) நீ என்ன சொல்ற?

நந்தன் : எனக்கு அனுராதாவ சொந்தமாக்கிக்கணும்.

குழு : அன்பு ஒன்று இருக்குன்னு நாங்க தெரிஞ்சிக்கிட்டோம்.

நந்தன் :அன்போடவே இருங்க. அதனால மட்டுமே நான் உங்கமேல அன்பு செலுத்தல.

(யாரும் ஒன்றும் கூறவில்லை. ஒன்றாம் குழுவைத் தவிர மற்ற யாரும் இனி விசேஷமாகக் கூறுவதற்கில்லை என்ற அளவில் இரு குழுவும் வேறு படுத்தப்பட்டுள்ளது.)

மந்திரவாதி : உனக்கு நான் சொன்னது புரிய ல இல்லையா?

குழு ஒன்று : புரிஞ்சிது, மனுசனுக்கு இதயம்னு ஒன்னு இருக்குன்னு நாங்க தெரிஞ்சிக்கிட்டோம்.

மந்திரவாதி : போதும். சமையல்காரன்தானே நீ? உடம்புகளக் கொண்டு அடுப்பை எறியக்கூடிய அற்புத வித்தைக்காரன்.

குழு : இன்னைக்கு உடம்ப எரிக்கும்போது உள்ள ஏதோ ஈரம் இருந்துச்சி. அது இதயம்னு அனுராதா எனக்கு சொல்லிக் கொடுத்துச்சி.

மந்திரவாதி : ஓஹோ...... என் கண்கட்டோட இறுக்கம் போதலியோ?

குழு ஒன்று : உடம்பின் சூடும் போதாது பச்சை விறகு மாதிரி, சூடு பிடிக்கும் போது கட்டைப் புகை வருது. என்னோட நரம்பு முழுதும் அது பாயுது. எனக்கு மூச்சடைக்குது.

(மந்திரவாதி அவனுடையத் தோளைத் தொடுகின்றான்)

குழு ஒன்று : போ......! என்னோட பக்கத்துல வராத போ.

(குழு பின்னோக்கிச் செல்லும்போது மந்திரவாதி அவர்களை நோக்கி வருகிறான்.) நில்லு......

(குழு ஒன்று தன் இடுப்பிலிருந்து கறி வெட்டும் கத்தியை எடுக்கின்றது.)

மந்திரவாதி : (அலட்சியமாக) ஏண்டா! அத அசிங்கப் படுத்தாத. பச்சைக் கறி பின்ன அது எப்படி எரியும்?

குழு ஒன்று : புடலங்காய் மாதிரி, வெண்டைக்காய் மாதிரி, பூசனிக்காய் மாதிரி, பரங்கிக்காய் மாதிரி உன்னைப் பொடிப் பொடியா அரிவோம்.

மந்திரவாதி : ஏண்டா, சொல்லும்போதே எல்லாத்தையும் சொல்லக் கூடாதா நான் சுத்த சைவம்னு சனங்க நினைச்சிக்க மாட்டாங்க?

குழு ஒன்று : ஆமாம், ஆமாம் வாத்து, கோழி, ஆடு.

மந்திரவாதி : முடிஞ்சிட்டுதா?

குழு ஒன்று : (மந்திரவாதியை தனது பிடிக்குள் வைத்து, இப்படி குனிய வெச்சி வெட்டுவோம். தோல உரிப்போம், மீன் துண்டங்க மாதிரி வவுந்துருவோம்.

உப்பு மிளகா மசாலா எல்லாம் போடுவோம், சீமைச் சட்டியில எண்ணெய ஊத்தி, தீ மூட்டிக் கொதிக்க வைப்போம். அதுல உன்ன......

(இதை முழுவதும் கூறுவதற்கு ஏற்றாற் போன்று மந்திரவாதியை அவ்வாறு பாவனை செய்து காட்டுகின்றனர். இதற்கு முழுவதும் தான் இரையானது போன்று மந்திரவாதி— இந்நிலையில் அவனைச் சீமைச் சட்டியில் தூக்கிப் போடப் போகும்போது அவன் திரும்பவும் புன்சிரிப்போடு எழுந்து நிற்கின்றான். குழு ஒன்று பயந்து பின்னோக்கிச் செல்கின்றது. மந்திரவாதி நீட்டிய கையில் அவன் கத்தியைத் தருகின்றான். அந்தக் கத்திமுனையால் அவனைக் குத்தி எடுப்பது போன்று அவனை அவ்விடத்திலிருந்து அப்புறப்படுத்தி ஓர் இடத்தில் நிறுத்துகின்றான்.)

மந்திரவாதி : (குழுவை உற்றுப் பார்த்துக் கொண்டே) பரஸ்பரம் அன்பு கொள்ளத் துடிக்கின்ற உங்களுடைய மனசில இதோ நான் விரோத விதைகளைத் தூவுகிறேன். (பார்வையாளர்களைப் பார்த்து) தயாராக இருங்கள். மனுச மனசில ஒரு விதை முளைக்கின்றது. வளருகின்றது. படருகின்றது. விரோதக் காய் காய்க்கின்றது. ஆஹா...... பாக்கறதுக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு இல்லியா? அப்படீன்னா......

(குழு ஒன்று எழுந்திருக்கின்றது. மந்திரவாதியின் பக்கத்தில் கனவு கண்டவர்களைப் போன்று வந்து சேருகின்றனர். கத்தியை வாங்கிக் கொள்கின்றனர். மந்திரவாதி அரங்கைவிட்டு வெளியேறுகின்றான். குழு ஒன்று மந்திரவாதி சென்ற திசையையே பார்த்துவிட்டு ஆதரவற்ற நிலையில் நிற்கின்றது. அவர்களை நோக்கி மற்றொரு குழு வருகின்றது )

குழு இரண்டு : என்ன நடந்தது?

குழு ஒன்று : நீ என்னோட எதிரி.

குழு இரண்டு : நானா? நாம எல்லோரும் ஒரே மாதிரி அந்த ஆளோட கை பொம்மைகள் தானே?

குழு ஒன்று : இல்ல, என்னோட இந்த வேதனைகளுக்கும் துன்பங்களுக்கும் நீதான் காரணம். நீ எனக்கு அந்நியன். நமக்கு தெய்வம் இரண்டு.

குழு இரண்டு : நாம இது வரைக்கும் அப்படி சிந்திக்கவே இல்லையே?

குழு ஒன்று : நான் சிந்திக்கிறேன். அந்த ஆளு என்ன துன்புறுத்த நீதான் காரணம் இந்தக் கூடாரமும் அவரும் என்னோட பக்கம், ஆனா அத நீ அனுமதிக்கல.

(குழு ஒன்று அவர்களுக்கு நேராகக் கத்தியை உயர்த்துகின்றது. சுந்தரன், நந்தன் அதைப் பிடிக்கின்றான்.)

சுந்தான் : நாம எல்லோரும் ஒன்று எல்லாத்திலேயும்.

குழு ஒன்று : அப்படீன்னா என்னோட வழியை நீ தடுக்காத.

சுந்தரன் : எதையும் வேறுபடுத்திப் பாக்காதவிதத்தில நாம சீக்கிரமே ஒன்னு சேர்ந்திருக்கோம்னு நான் நெனைக்கிறேன்.

குழு ஒன்று : இல்ல......இல்ல......இல்ல......

சுந்தரன் : இதுதான் விஷயம். இப்பகூட அந்த ஆளு நம்ம ஒரே மாதிரியா கண்ணக் கட்டியிருக்கானா?

(இல்லை...... என்று உரக்கக் கத்திக் கொண்டே குழு ஒன்று திரும்புகின்றது. அவர்களுடைய கத்தி சுந்தரன் வயிற்றில் பாய்கிறது. சுந்தரன் இறக்கின் றான். கீழே விழுகின்ற சுந்தரனும் தாம் என்ன செய்தோமென்று அறியாத நிலையில் குழுவும். குழு வேதனையோடு செய்வதறியாமல் அவனை சுற்றி நிற்கின்றது. மந்திரவாதி திரும்பி வருகின்றான் சுருண்டு விழுந்த சுந்தர னைத் தாங்கிக் கொண்டு நீட்டிப் பிடித்த கத்தியோடு குழு ஒன்று நிற்கின்றது. மந்திரவாதி கத்தியை வாங்கித் தனது துணியால் அதில் ஒட்டியுள்ள ரத்தத்தை துடைக்கின்றான். அவன் திடீரென ஒருபுறமாகச் சென்று தனது துணிகளைச் சரிசெய்து கொள்கின்றான். அச் சமயத்தில் சிலை [வடிவாகிப் போன குழுவை சோகத்தோடு பார்வையிடுகிறாள் அனுராதா.)

மந்திரவாதி : நிகழ்ச்சி தொடங்கட்டும்......

குழு ஒன்று : நிகழ்ச்சித் தொடங்குவதாக இருந்தால் அது அவனுடைய உயிரைக் கொடுப்பதாக தொடங்கட்டும்.

மந்திரவாதி : அவனுக்கு உயிரைக் கொடுப்பதும் எல்லோரையும் கொல்லுவ தும் ஒன்றுதான்.

குழு : என்ன?

மந்திரவாதி : ஆமாம் அதனாலதான் புதுமையாகவும், பிரமிக்கத்தக்கதுமான வேறொரு நிகழ்ச்சிக்குப் போவோம். இப்போது நான் உங்களை சிலைகள் செய்கின்றேன்.

குழு ஒன்று : அதெப்படி, இது புதுசானதா இருக்க முடியும்? நாங்க இப்பவும் எப்பவும் அப்படியேதானே இருக்கோம்.

மந்திரவாதி : ஆனா, முன்னமாதிரி சலனமற்ற நிலையிலிருந்து மீண்டும் திரும்ப முடியாது. உறைஞ்சிபோன உடப்பு. காய்ஞ்சிபோன மனசு. (பார்வையாளரைப் பார்த்து) சாவமேற்ற சிலைகளைப் பற்றி பாட்டி சொன்ன கதை உங்களுக்கு ஞாபகம் இருக்கா? இதோ இங்க நடந்துக்

கிட்டிருக்கு. (குழு சிலை வடிவங்களாக மாறுகின்றது) இவுங்களுக்கெல்லாம் ஒரு ராஜகுமாரன் வந்து விமோசனம் தருவான்னு நீங்க நெனக்கிறீங்களா? (சிரிக்கின்றான்) அது முன்னாடி கண்ணத்தெறந்து பாருங்க. இதோ...... சர்வ மந்திரங்களும் கைவசமுள்ள நான்...... அனுராதாவே......

(அனுராதா கீழே விழுகின்றாள், பின் அவள் மெதுவாக எழுந்து ஒவ்வொருவரின் நேராக தடுமாறித் தடுமாறிச் செல்லுகின்றாள். யாரும் கவனிக்கவில்லை.)

அனுராதா : என்ன இது?

மந்திரவாதி : இதோ சிலைகளாக உறைந்துப்போன உனது பிரியமானவர்களுக்கிடையல், இந்த கூடாரத்தில் நீ மட்டும் தனியே ஜீவனோடு.

(அவள் புறப்படத் தயாராகும்போது மந்திரவாதி அவளருகில் செல்கின்றான்.)

அனுராதா : இதென்ன சோதனையா? கரும்பாறைக்குள்ளேருந்து கண்ணீர் அருவி மாதிரி, பாக்கக்கூடிய கண்ணோட நான் மட்டும் இங்கே தனியா?

(திடீரென்று சிலை வடிவங்கள் அனைத்தும் அவள் முன்பாக பிச்சை கேட்பது போன்று கையை நீட்டுகின்றனர்.

அனுராதா : வேணாம்...... பொண்ணுன்னா ஒரு அம்மான்னு சொல்லுவாங்க. என்னால முடியாது. இந்த மக்களோட ஓலத்த என்னாலக் காது கொடுத்து கேக்க முடியல.

(சிலை வடிவங்கள் பழைய நிலைக்குத் திரும்புகின்றன. அனுராதா சோர்வு அடைந்த நிலையில் நடுவே நிற்கின்றாள். மந்திரவாதி திடீரெனப் பரவசம் அடைந்தவனாய் அவளருகில் வருகின்றான்.

மந்திரவாதி : பெண்ணெ நானும் சோர்ந்து போயிருக்கிறேன். உனக்கு சோறாக்கத் தெரியுமா?

அனுராதா : தயவு செஞ்சி என்னையும் அவுங்க மாதிரியே ஆக்கிடு.

மந்திரவாதி : ஏன் அப்படி?

அனுராதா : எனக்குக் கண்ணீரே வறண்டு போச்சு.

மந்திரவாதி : அவ்வளவுதானா...... வேணாம். எனக்காக நீ இனிமே அழுக வேணாம்.

அனுராதா : எனக்காவாவது என்னோட மக்களுக்கு மன்னிப்புக் கொடுங்களேன்?

மந்திரவாதி : என்னம்மா சொல்ற? நானும் நீயும் சேர்ந்து நம்மோட இந்த சொத்து எல்லாத்தையும் உருக்கி பொன்னாக்கி அத அனுபவிக்க ஒரு

தட்டான் போதாதா இந்த உலகத்துல?

அனுராதா : ங்ஹே......?

மந்திரவாதி : ங்ஹாஹா...... பெண்ணே நாம நிகழ்ச்சிய வேறமாதிரியா மாத்திருவோம்.

அனுராதா : எனக்கு வேற எந்த வெளையாட்டும் தெரியாது.

மந்திரவாதி : அதான பாத்தேன். என்னோட கண்ணையே ஏமாத்திட்டு காதலிக்கக் கத்துகிட்டவதானே நீ. ங்ஹா... அத்தத் திறமைய இப்ப நான் பாக்கட்டுமா? வா...... நாம அப்பா அம்மா விளையாட்டு வெளையாடுவோம்.

அனுராதா : (கையைப் பிசைந்துகொண்டே) நான் இல்ல விளையாடற துக்கு...... பாக்கவும், பொறாமப் படவும், கண்ணாலக் கண்டத நாலு பேருகிட்ட குசுகுசுக்கவும் நாலுபேரு இல்லாம, எப்படி அம்மா அப்பா விளையாட்டு விவையாடறது? அதுல ஒரு சந்தோஷமும் இருக்காது.

மந்திரவாதி : அதுவும் சரிதான்... (பார்வையாளரைக் காட்டி) உன்னோட கண்ணத் தெறந்தாங்களே அவுங்க இருக்காங்களே, பாக்கறதுக்கு...... போதாதா?

அனுராதா : அவுங்க எல்லோருமே களத்துக்கு வெளியிலதானே இருக்காங்க. களத்துக்கு முன்னாடி வந்தாங்கன்னா சுவாரசியமா இருக்கும்.

மந்திரவாதி : (சிலைகளைக் காட்டி) அப்படீன்னா இவுங்கள மாத்திடுவோம்.

(அனுராதா சரியென்று தலையாட்டுகின்றாள்.)

மந்திரவாதி : ஓஹோ... அப்படியா...... இதுதான் உன் மனசுல இருக்கறது இல்லியா? இந்த ஜால வித்தகாரங்கிட்ட ஒன்னும் ஜாட காட்டாதே! ம்... உடையட்டும் உன்னோட மனக்கோட்டை! !

(மந்திரவாதியின ஆணையை சட்டை செய்யாமல் நிற்கின்றாள் அனுராதா.)

மந்திரவாதி : என்ன! !? நான் உருவாக்கின மனக் கோட்டையை என்னால உடைக்க முடியலியா?

அனுராதா : கோட்டை உன்னோடதான்னாலும், மனசு என்னோடையது. கனவு காண மட்டுந்தான் எனக்கு சொல்லிக் கொடுத்துட்டுப் போன கண்ணைக் கட்டும் மந்திரவாதியே உன்னால மனசக் கட்ட முடியுமா?

மந்திரவாதி : கட்டமுடியும். இதே ம்... தெரிஞ்சிக்கிற மனப்பான்மையே இல்லாம போகட்டும்.

அனுராதா : நான் தெரிஞ்சிக்கிட்டது மட்டும் அறிவா? பாத்தது மட்டுந்தான் சாட்சியா? கேட்டது மட்டுந்தான் செய்தியா?

(குழு அதே நிலையில் நின்று கொண்டு ஒரு மந்திரம் சொல்கின்றனர். அதைக் கண்டு மந்திரவாதி அதிர்ச்சியடைகின்றான்.)

மந்திரவாதி : எல்லாத்தையும் மறக்கனும். ஒழிக்கனும். (பார்வையாளரைப் பார்த்து) இதுதான் என்னோட அடுத்த வித்தை. எங்க என்னோட கொட்டு வாத்தியம்?

(மந்திரவாதி கொட்டு வாத்தியத்தை எடுக்கச் செல்லும்பொழுது அது அவனுடைய பிடியை விட்டு நழுவிப் போகின்றது. தனனம் தனனம் என்ற வாய்ப் பாட்டிற்கு ஏற்ப சிலைகள் ஆடுகின்றன. கொட்டு வாத்தியம் அரங்கை விட்டு பார்வையாளர்களுக்கிடையே விழுகின்றது. மந்திரவாதி ஒரு நொடிப்பொழுது திகைப்போடு நின்றுவிட்டு, பின் பார்வையாளரை நோக்கிப் போகும் பொழுது, குழு ஒன்று சேர்ந்து அவனைச் சுற்றி வளைக்கின்றது. அனுராதா மட்டும் அவற்றினின்றும் வேறுபட்டவளாய் நின்று பார்வையாளரை நோக்கித் திரும்புகிறாள்)

அனுராதா : அதை நான் எடுக்கட்டுமா? எடுத்து கொட்டிக் காட்டட்டுமா? அந்த தாளத்திற்கு ஏற்றாற்போன்று இந்த மந்திரவாதி துள்ளட்டுமா?

நந்தன் : (சிரித்துக் கொண்டே) அதெப்படி முடியும்? நம்மோட கண்ணுகட்டு மட்டும்தானே அவுந்திருக்கு. (பார்வையாளரைச் சுட்டிகாட்டி) அவுங்களோட கண்ணு இப்பவும் கட்டியிருக்கே? அப்ப எப்படி அவுங்களா அந்த கொட்டு வாத்தியத்தைப் பாப்பாங்க? அத பாக்காத வரைக்கும் எப்படி அவுங்க சொயமாத் தேடிகிட்ட கண் கட்டுலேர்ந்து தப்பிப்பாங்க?

(குழு தனித்தனியே பிரிகின்றனர். பின் எல்லோரும் மந்திரவாதியிடத்தில் புன் சிரிப்போடு ஒன்றுசேர்ந்து செல்கின்றனர் )

குழு : அது சரிதான்...... இந்த வேறுபாடுதான் பிரச்சனை. எங்களுக்கும் உங்களுக்கும் இந்த விபரம் தெரியும்போதுதான் கண்கட்டே அவுறும். அப்பதான் இந்த நாடகமும் முடியும்.

இந்தக் கூற்றோடு நாடகம் முடிகின்றது.

---

**வங்காள நாடகம்**

## சாகாபுரேர் சுகன்யா

**உஷா**

தமிழ் நாடக உலகின் எல்லா முகங்களையும் அந்த அரங்கில் ஒரே நேரத்தில் காண முடிந்தது. இவ்வளவிற்கும் அங்கு நடந்தது தமிழ் நாடகமல்ல. ஏப்ரல் 28, 29, 30 மூன்று நாட்கள் ராணி சீதை ஹாலில் நடைபெற்ற வங்காள நாடக விழாதான் அது. குறிப்பாக மூன்றாவது நாள் அன்று நடைபெற்ற 'சாகாபுரே சுகன்யா' குறிப்பிடத் தக்கது.

பெர்டோல்ட் ப்ரக்டின் 'தி குட்வுமன் ஆப் செசுவான்' நாடகத்தின் வங்காள மொழியாக்கமே அந்த நாடகம். இதை நிகழ்த்திக் காட்டியது வங்காளத்தின் பிரபலமான நாடகக் குழுவான நந்திகார் இயக்கியவர் ருத்ரபிரசாத் சென்குப்தா. மூன்று மணி நேரம் நடைபெற்ற இந்நாடகம் நடனம், இசை கலந்து உயிரோட்டமான அனுபவமாகயிருந்தது.

சீன பழங்கதை ஒன்றை அடிப்படையாகக் கொண்டு ப்ரக்ட் இதை எழுதினார். நல்ல பெண்மணியைத் தேடி கடவுளர் பூமிக்கு வருகின்றனர். அவர்களுக்கு தங்க இடம் கிடைப்பதில்லை. அவர்களுக்கு அடைக்கலம் தருபவள் ஒரு விலைமாது. அவளே நல்ல பெண்மணி. அவளை பணக்காரி யாக மாற்றுகின்றார் கடவுள். அதன் விளைவுகளே பிந்தைய பகுதி.

இருபது பேருக்கும் மேற்பட்ட நடிகர்கள் பாடி, ஆடி நடித்த இதை வெறும் வார்த்தைகளால் நாடகம் என்று சொல்லிவிட முடியாது. வங்காளத்தின் நாட்டுப்புற நடனம், பாடல்கள், சாஸ்திரிய சங்கீதம் எல்லாமும் இணைந்து உருவானது இந்நாடகம். குறிப்பாக நல்ல பெண்ணாகத் தோன்றிய ஸ்வலேகா சென்குப்தா நடிப்பு அலாதியானது. அதுவும் ஆணாகவும் பெண்ணாகவும் மாறி மாறி நடிப்பதும், தோற்றம், குரல், நடை எல்லாவற்றிலும் அவர் காட்டும் துல்லியம் அபாரமானது.

கடவுள் இந்தித் திரைப்படக் கதாநாயகன் போல மினுமினுக்கும் ஆடையுடன் உயர்ந்த பீடத்திலிருந்து ஒருமித்து இறங்குவதும், மேடை, திடீரென்று கடையாவதும், சேரியாவதும், வசிப்பிடமாவதும் குறிப்பிடத்தக்கது. காட்சி மாற்றங்கள் பார்வையாளனின் முன்பே நிகழ்த்தப்பட்டதும் குறிப்பிடத்தக்கதே. இசை உயிர்ப்பிற்கு உரிய காரணமாகயிருந்தது. நடிகர்களிடம் முதிர்ச்சியும் தனித்திறமையும் இருந்தன.

இந்த நாடகத்திற்காக இருபதிலிருந்து முப்பது பேர் பதினெட்டு மாதம் ஒத்திகை பார்த்திருக்கிறார்கள். எவ்விதமான உதவியும் எவரிடமும் பெறப்படவில்லை. தொடர்ந்த உழைப்பின் வெற்றியே இந்த நாடகம். தேர்ந்த நடிகர்கள் நாடகத்தை அனுபவ நிலையாக மாற்றினர். இதே நாடகக் குழு விழாவின் முதல் நாள் அன்று ருஷ்ய நாடகமான 'தி பாஸ்ட் அப்பாயிண்ட் மென்ட்' நாடகத்தை நிகழ்த்தியது அதுவும் தரமான தயாரிப்பே. நந்திகார் இந்திய நாடக அரங்கில் குறிப்பிடத்தக்க நாடகக் குழு.

பார்வையாளர்கள் நாடகம் முடிந்த பின்பும் அது எழுப்பிய அலைகளிடமிருந்து உடனடியாக விடுபட முடியாமலிருந்தனர். தாங்கள் பார்த்த நாடகங்களில் பிரமாதமான நாடகம் இது என்பது பலரது எண்ணம். உண்மையும் அதுவே.

கன்னட நாடகக்காரர்

## பிரசன்னாவின் 'காந்தி'

ஷங்கன்னா

மீண்டும் பிரசன்னா நாடக உலகின் பிரச்சினை குரலாக மாறியிருக்கிறார். அவரது சமீபத்திய நாடகமான 'காந்தி' காந்தியைப் பற்றிய புதிய மதிப்பீட்டை முன் வைக்கின்றது. டெல்லியில் உள்ள நேஷனல் ஸ்கூல் ஆப் டிராமாவில் அங்குள்ள மாணவர்களைக்கொண்டு நிகழ்த்தப்பட்ட இந்த நாடகம், பிரசன்னா வின் கேள்விகளையும், சமூக கண்ணோட்டத்தையும் வெளிப்படையாக முன்வைக்கின்றது.

காந்தி நாடகம் நாடகப் பள்ளியின் மூன்றாமாண்டு மாணவர்கள் சிலர் நாடகம் போடத் துவங்குவதாக துவங்குகிறது. உடனே அவர்களின் முன் எழும் பிரச்சினை எதை நாடகமாக போடுவது? அயோத்தி பிரச்சினையிலிருந்து பல விசயங்கள் பேசப்படுகின்றன. இறுதியில் ஆசிரியை ஒத்துக்கொள்ள இந்து, முஸ்லீம் பிரச்சினையை முன்வைத்த நாடகம் ஒத்துக்கொள்ளப்பட்டு, நாடகம் துவங்கப்படுகின்றது. காந்தியின் கதையாகிறது அது. நாதுராம் கோட்சே இந்து தீவிரவாதத்தின் உருவமாகிறான். காந்தி உருவாகிறார். நாடகம் முழுமையாக உருக்கொள்ளத் துவங்குகிறது. வயதான காந்தியல்ல, இளமை யான காந்தி. கோட்சேயும் வசீகரமானவனே. இருவரும் தங்கள் நிலைகளை முன்வைத்து பேசுகின்றனர். விவாதங்களும், உரைகளுமாக விரியும் நாடகம் தீவிர நிலையை எட்டுகின்றது. காந்தியின் பஜனைகளும் இடம் பெறுகின்றன. யதார்த்த நிலை, நாடகம் என்ற வேறுபாடு அழிகின்றது. அனுபவம் எங்கும் நிறைகின்றது.

இந்நாடகத்தின் ஆதாரமாக ஆட்டன்பரோவின் 'காந்தியும்', காலின்ஸ் அண்ட் லெப்பியரின் 'பிரீடம் அட் மிட்நைட்' இரண்டும் அமைந்துள்ளது. நாடகம் காலவரையறையாக காந்தியின் வாழ்க்கையை விளக்கவில்லை. அயோத்தியா பிரச்சினையில் காயமுற்ற ஒரு கலைஞனின் தீவிரம் காந்தி நாடகமெங்கும் தீவிரமாக வெளியாகின்றது. மத ரீதியான விஷயங்களை பிரசன்னா தெளிவாக அணுகுகிறார்.

கன்னட நாடகமேடையில் தனது நாடகங்கள் மூலம் தனிக் கவனம் பெற்ற பிரசன்னா, தொடர்ந்து சமூக விழிப்புணர்விற்கான நாடகத்தை நோக்கியே நகர்கிறார். இந்த நாடகம் பார்வையாளர்களின் முன்பு காலத்தின் பல கூறுகளை முன்வைக்கின்றது. அரசியல், கலாச்சார நிகழ்வுகளை கேள்விக்கு உட்படுத்துகின்றது.

பிரசன்னா சொல்வதுபோல காந்தியை இது முற்றிலும் வேறாக அணுகு கின்றது. இந்த அவசியம் நம் காலகட்டத்தின் தேவையாகும். கோட்சே வேடத்தில் நடிக்கவே மாணவர்கள் பெரிதும் ஆர்வம் காட்டினர். காந்தி வேடத்தில் நடிக்க அதிக பேர் ஆர்வம் காட்டவில்லை எனும் பிரசன்னா, இதையும் நம் இன்றைய சமூக நிகழ்வாகவே பார்க்கிறார்.

ஆன்மீக, அரசியல் இரண்டு நிலைகளும் கொண்ட காந்தியின் ஆளுமையை நாடகத்தின் மூலம் வெளிக் கொணருகிறார் பிரசன்னா. இவரது 'காந்தி' நாடகம் சமீபத்திய சர்ச்சைகளில் முதல் குரலாக எழுகின்றது.

—நன்றி : ஹிந்து

---

- கார்த்திமேரியின் இயக்கத்தில் எம். எஸ். ஜி. நாடகக் கலைக்குழு 'காட்டுக்குள்ளே திருவிழா' என்னும் குழந்தைகள் நாடகத்தை 19-5-93 பாண்டிச்சேரியில் நிகழ்த்தியது.
- அரூபம் நாடகக்குழு நிஜந்தனின் 'கிரி கிழவன் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறான் 'நாடகத்தை நிஜந்தனின் இயக்கத்தில் 14-6-93 சென்னை ராணி சீதை ஹாலில் நிகழ்த்தியது.

---

## கடிதம்

'வெளி, ஆசிரியர் அவர்களுக்கு'

'நாங்கள் நியாயவாதிகள்' நாடகத்தின் விமரிசனம் (அல்லது அபிப்ராயம்) பற்றி சில விஷயங்களை எழுத வேண்டிய அவசியம் உள்ளது. முதலில் மொழியாக்க நாடகங்களை எடுக்க வேண்டிய அவசியம் என்ன?

இதற்கு நீங்கள் கொடுத்திருக்கும் விளக்கம் ஒரு பார்வையாளனின் அளவோடு நிற்கிறது. அது போதுமானதாயில்லை. நாங்கள் நியாயவாதிகள், காட்டுநகரம் ஆகிய இரு நாடகங்களை மொழிபெயர்த்ததன் தளம் Interpretation. இந்தத் தளம் அந்நிய மொழி இலக்கியத்தோடு ஒரு வாசகனுக்குள்ள உறவை அடிப்படையாய்க் கொண்டது. இன்றைய நாடகங்கள் (நவீனம் என்று அழைக்கப்படுவது) ஒரு பரந்த பார்வையாளர்களோடு இயங்க சூழல் இல்லாத போது, நல்ல இலக்கியங்கள் ஏற்படுத்தக்கூடிய பாதிப்பை மீறி நாடகங்களால் எதையும் சாதித்தல் இயலாது. இந்தப் புரிதலில்தான் எங்கள் நாடகத் தேர்வும் அடங்கியுள்ளது. இதில் எந்த Myth-ம் உருவாக்க நாங்கள் விரும்பவில்லை. இதே புரிதலில்தான் (அல்லது ஏறக்குறைய) வெளி பத்திரிகையும் வெளிவந்து கொண்டிருக்கிறது என்று நம்புகிறோம். (இல்லை எனில் வேறு வடிவத்தில் வேறு உள்ளடக்கத்தோடு பத்திரிகை இருக்கும்.)

ஒரு நாடகப் பிரதியோடு எங்களுக்கு உள்ள புரிதலில் சில சதவிகிதங்களே பார்வையாளனைச் சென்று அடைகிறது என்னும் யதார்த்தத்தை நாங்கள் அறியாமல் இல்லை இந்த இரண்டு நாடகங்களும் ஏதோவொரு விதத்தில் எங்களது நாடகம்போல் ஆனதுதான் உண்மை. அதனால்தான் இதைத் தேர்வு செய்தோம். இதையும் மீறி எங்களுக்குக் கிடைத்த ஏதோ ஒன்று பார்வையாளனுக்கு கிடைக்கவில்லை என்றால் அதற்குப் பல்வேறு காரணங்கள் உண்டு. அதைப்பற்றி விவாதிப்பது பயன் உள்ளதாக இருக்கும். நீங்கள் எழுதியுள்ளது போல நாடகக் குழுக்களின் நேர்மையும், உழைப்பும் சந்தேகப்படக் கூடியவை அல்ல என்பதுபோல உங்கள் விமரிசனத்தின் நேர்மையையும் நாங்கள் சந்தேகப்படவில்லை ஆனால் நுனிப்புல் மேயும் உங்கள் உழைப்பு, அபிப்ராயத்தை விமரிசனமாக்கும் உங்கள் தொனி எங்களையும், எங்கள் நாடகத்தையும் மட்டுமின்றி எங்கள் உழைப்பையும் கொச்சைப்படுத்துகிறது.

'இடைச்செருகல்கள் பிரச்சினையிலிருந்து விலகிப்போகின்றன'—இந்த வரிகள் குறித்து சில கேள்விகளை எழுப்ப வேண்டியுள்ளது. நாடகத்தின் மூலப்பிரதியை நீங்கள் படித்திருக்கிறீர்களா? எதனோடு ஒப்பிட்டு இந்த 'இடைச்செருகல்' தீர்மானத்திற்கு வந்தீர்கள்? விமரிசனம் செய்பவர் மூலப்பிரதியை படித்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் அந்த விமரிசனம் நிகழ்த்துதல் குறித்து மட்டும் நிற்கவேண்டும்.

'காட்டு நகரம்' பற்றி நீங்கள் எழுதிய விமரிசனம் சுருக்கத்திலும் இந்தப் போக்கு வெளிப்படுகிறது. உள்வாங்குதலில் தெளிவின்மை-என்பது எதை அடிப்படையாகக் கொண்டது? மூலப்பிரதியோடு தொடர்பு இன்றி இந்த வரிகளை எழுதியது சரியில்லை. (இவர்கள் வெளிப்படுத்த விரும்பிய விஷயம் சரிவர வெளிப்படவில்லை என்று கூறுவது நேர்மையானது.)

'நாங்கள் நியாயவாதிகள்' நாடகத்தின் உங்கள் கதைச்சுருக்கம் நீங்கள் நாடகத்தைத் தவறாகப் புரிந்துகொண்டு இருக்கிறீர்கள் என்பதைக் காட்டுகிறது. (கதைச்சுருக்கம் எழுதுவதில் உங்களுக்குப் பொறுமை அல்லது சுவாரஸ்யம் இல்லாமல் இருக்கலாம். அதற்காக இப்படி எளிமைப்படுத்துவது சரியில்லை ) பாத்திரங்கள் விவாதங்கள் மூலமே தங்கள் கருத்தை முன்வைக்கின்றன என்று 'Subtle' ஆக குறைபடும் நீங்கள் வார்த்தைகளில்லாமல் தூக்கில் தொங்க வேண்டிய புரட்சிக்காரன், ஒரு கிழவனை தூக்கில் போடுபவனாக மாறும் சூழல் பற்றி புரிந்து கொண்டிருந்தால் இப்படி எழுதியிருக்க மாட்டீர்கள். இரண்டு மணிநேர நாடகத்தை ஒரு இறுக்கத்தோடு தயாரிக்க ஒரு நாடகக்குழு தீவிரமான உழைப்பைக் கொடுக்க வேண்டியுள்ளதுபோல் ஒரு பார்வையாளனும் அத்தகைய நாடகத்தை எதிர்கொள்ள தன்னை மனத்தளவில் தயார் கொள்ள வேண்டிய அவசியம் உள்ளது. என் அனுபவத்திலிருந்து நான் இதைக் கூற முடியும். கூத்துப்பட்டறை தயாரித்த அன்டோரா நாடகத்தை நான் என் முழுக் கவனத்தோடு $2\frac{1}{2}$ மணிநேரம் பார்க்க முடியாமல் சிரமப்பட வேண்டியிருந்தது. இதற்குக் காரணம் நாடக நிகழ்ச்சியில் உள்ள குறைபாடு அல்ல. என் கவனச் சிதறலுக்கு நான் என்னைத்தான் பொறுப்பாக்க வேண்டும். நீங்கள் எழுதியுள்ளதுபோல் நாங்கள் நியாயவாதிகள் நாடகத்தில் உள்ளீடாக ஒரு பிரம்மாண்டமான சக்தி வெளிப்படுவதும் பிறகு பாத்திர அசைவுகள் இயந்திரமாய்ப் போவதும் கடைசியில் புத்துயிர் பெறுவதும் நிகழ்த்துதலில் உள்ள வளர்ச்சிப் போக்கா? இந்தப் பிரச்சினைக்கு எங்கள் நாடகத்தையும் உங்கள் விமரிசனத்தையும் மீறி ஒரு பொதுவான பிரச்சினையாய் நாம் அணுக முடியுமென்று நினைக்கிறேன்.

ஒரு படைப்பை உங்களுக்குச் சமதளத்தில் வைத்து மோதுங்கள். எந்தத் தயைதாட்சணியமும் தேவையில்லை. படைப்பை விட்டு மற்றதில் கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடும் போக்கு சரியல்ல. இரட்சகர் முகமூடியணிந்து கையை உயர்த்தும்போதுதான் சகல விஷயங்களும் அடிபட்டுப் போகிறது. மற்ற எல்லாவற்றையும் மீறி மூலப்பிரதியோடு விமரிசிக்கும் உங்கள் போக்கிற்கு நீங்கள் கண்டிப்பாய் விளக்கம் கொடுக்க வேண்டும்.

சீ. ராமானுஜம்.